

ஜூன், 1984
விலை: ரூ. 1/-

# ஸப்தகிரி

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



மத்தநன்னறுமலர்முருக்கமலர் கொண்டு
முப்போதுமுன் னடிவணங்கி
தத்துவமிலியென்றுநெஞ்செரிந்து
வாசகத்தழித்துன்னைவைதிடாமே
கொத்தலர்பூங்கணை தொடுத்துக்கொண்டு
கோவிந்தனெனபதோர்பேரெழுதி
வித்தகன்வேங்கடவவாணனென்னும்
விளக்கினிற்புகவென்னை விதிக்கிற்றியே.

*நல்மணமிக்க ஊமத்த மலர்களையும் முருக்க மலர்களையும கொண்டு மூன்று காலங்களிலும் உன்னடியை வணங்கி 'இவன பொய்யான தெய்வம்' என்று சொல்லி மனங் கொதித்து (உன் கவுரவத்தை) அழிதது வாய்கொணடு உன்னை நித்திக்க வேணடாதபடி கொத்துக் கொத்ததாக மலராது நின்ற மலர்களாகிய அம்புகளை வில்லில் தொடுத்துக கொணடும் கோவிந்த நாமத்தை (நெஞ்சில்) தரித்துக்கொண்டு அற்புதனை திருவேங்கட முடையான் என்கிற விளக்கிலே (நான்) சேரும்படி நீ என்னை செய்ய வேணும்.*

—நாச்சியார் திருமொழி-3.




தனிப்பிரதி ரூ. 1

வருடச் சந்தா ரூ. 12

ஜூன், 1984

மலா 15

இதழ் 1


*சிறப்பாசிரியர்*

திரு. ஜி. குமாரசுவாமி ரெட்டி
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர்*.

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

*அச்சிடுபவர்:*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

**பிரதிகளுக்கு:**

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.

## உள்ளுறை



**அட்டைப்பட விளக்கம்**

முகப்பில : ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில்.
பின்னட்டையில : ஸ்ரீ பதமாவதி தாயார் கோயில் தெப்போற்[சவம்.
இரண்டாவது, மூன்றாவது : தி. தி. தேவஸ்தான பொன்விழாக் காட்சிகள்.

# உங்களுடன்....

தூக்கமும ஏக்கமுமாகத் தன் ஆயுளின் ஏறக்குறைய முழுப்பகுதியினைக் கழித்துக் கொண்டிருக்கும் இன்றைய மனிதன், தன அறிவின வளர்ச்சிக்காக அவன் ஒதுக்கிய காலம் மிகச் சிறிதுதான். அதிலும் ஆன்ம வளர்ச்சிக்காக-நலனுக்காக அவன் தன்னைத் தானே சமயத்துடன் ஒன்றித்துக் கொண்ட காலம் அவன் வாழ்நாளில் சில பல நாட்களேயாம. நாளும உண்டும உறங்கியும கழித்திடும் மனிதனிடம் அவனை அறியாமையாலேயே அறிவுப்பசி பதுங்கியிருப்பது அவரவர் அனுபவத்தால உணரலாம. தன்னைச் சுற்றிலும நடக்கும் விஷயங்களில் ஈடுபாடு கொள்ளும ஒரு பண்பு ஓர் உள்ளியலபாகவே பொதுவாக மனிதனிடம் உள்ளது. இவ்வுண்மைக்குச் சான்றாக வருடந்தோறும புதியது புதியதாக வெளி வந்து கொண்டிருக்கும திங்களிதழ்களும், வார ஏடுகளும, தினசரிகளும் விளங்குகின்றன.

ஆனால், இது போன்று தோன்றும பத்திரிகைகள் எந்த அளவு, எந்த வகையில் மக்களின் அறிவுப பசிக்குத் துணை போகினறன எனபதைச் சமன் செய்து சீர் தூக்கிப பார்க்கும்போது, இவற்றில் பல, இச்சமுதாயத்தை அதுவும் இன்றைய இளந்தலைமுறையினரைத் திருத்த முடியாத ஓர் அழிவுப பாதைக்கு அழைத்துச் சென்றுவிடுமோ என்றே அஞ்ச வைக்கினறது. அந்த அளவுக்கு மக்களின் ரசனை குறைந்துள்ளதா அல்லது அந்த அளவுக்குத் தாழ்ந்திட பத்திரிகைகள் வழி வகுக்கின்றனவா எனறு கூற முடியாதவாறு ஒரு சூழ்நிலை உருவாகியுள்ளது. பொழுது விடிந்தது முதல் மறையும் வரை மனிதன் எதிர்படும் பிரச்சனைகள தீர முடியாத, தீர்க்க முடியாத வகையில் உள்ளன. தன் பிரச்சனைகளைத் தீர்த்துக் கொள்ள முடியாத அவன், பிறர் பிரச்சனைகளை அறிய விருமபுகின்றான். அதுபோது தன் பிரச்சனையைச் சற்றே மறநதுவிடுகின்றான. அதற்குப பத்திரிகைகள் உதவி புரிகின்றன. இது ஒரு மறக்க முடியா, மறுக்க முடியா நிதர்சன உண்மை. அதே சமயத்து ஒரு கசபபான உண்மையும நாம அறிந்திடல் அவசியம. பிரச்சனையை மறக்க உதவும பல பத்திரிகைகள, சில பல சமயங்களில அப்பிரச்சனைகளை மேலும சிக்கலாக்கும வகையில் விளங்குகினறன என்பதே அது. கால வெள்ளத்தில அது போன்ற பத்திரிகைகள ஒரு நாள் அடித்துச் செல்லப்பட்டாலும், அவை நடமாடும் அக்குறுகிய காலத்தில் அவை இச்சமுதாயததிறகு செயதிடும் தீங்கு அழிக்க முடியாத ஒரு வடுவாக அமைந்து விடுகின்றது. உடல், நோய கண்டிடின் அதனை அகறறிட வழி உண்டு. உள்ளம ஊனம உற்றிடின், எச்செல்வம பெற்றிடினும் பயனில்லை.

தன் பிரசசனையை மறந்திட பிறர் பிரச்சனைகளின்பால் கவனம செலுத்துவதைவிட, தன் பிரச்சனையை தீர்க்க முயற்சி செய்வதே தனக்கும் தன் நாட்டிற்கும நலம் பயக்கும். சாதாரணமாக பிரச்சனைகள் எழும்ப போட்டி, பொறாமை, கோபம, தன்னலப்பறறு, இரக்கமின்மை போன்றவைதாம் காரணங்களாக அமைகின்றன. இவைகளைக் களைய வேண்டுமானால மனம செமமையடைய வேண்டும. அதற்கு சமயமே உற்ற துணை; ஒரே துணையுமாகும். இச்சமயத்தின் அருமை பெருமைகளைப பரபபுவதறகாக இபபாரத மண்ணில் நடமாடிய அவதார புருஷர்களும், ஆசார்ய புருஷர்களும, சமய இயக்கங்களும எத்தனையோ; எவவளவோ. இவ்வகையில் இவ இருபதாம நூற்றாண்டில் தன்னுலியன்ற இந்து சமய நற்பணிகளை ஆறறிவரும திருமலை திருபபதி தேவஸ்தானம் மேற்கொண்ட ஆக்கப பூர்வமான முயற்சிகளில ஒன்று அது வெளியிடும 'ஸபதகிரி' எனும சமயப பததிரிகையாகும. சுமார் 36 ஆண்டுகளுக்கு முன்னால மேலாண்மையினால் ஒரு சாதாரண சமயப் பத்திரிகையாகத் தொடங்கப்பட்டு, 1970-இல் 'ஸபதகிரி' எனும் பெயர் பெற்று, இமமாதம முதல் தனது மறறுமொரு புத்தாண்டில அடியெடுத்து வைத்துள்ளது. வியாபார நோக்கம சிறிதும இனறி, இந்து சமயம சமபந்தப்பட்ட கருத்துக்களை ஒரு சாதாரண மனிதனுக்கு எளிதாக உணர்ததிடும வகையில சிறந்த சமய எழுத்தாளர்களைக் கொண்டும, புதிய எழுத்தாளர்களை ஊக்குவித்தும 'ஸபதகிரி' முடிந்த வரை தம சமயப பணியினைத் தொடர்ந்து செயற்படுத்தி வருகினறது. அதில வெறறியும பெறறுள்ளது இவ்வெறறி திடீரென்று கிடைதத பரிசு அல்ல மேலாண்மையின பொறுமைக்கும உழைபபுக்கும கிடைத்த பரிசு என்றே கூறுதல வேண்டும. ஆகையால இவ்வெறறி ஒரு மாபெரும் வெறறியாக அமைய வேண்டுமாயின 'ஸப்தகிரி'க்கென அதிகமான வாசகர்கள உருவாக வேண்டும். இதனால் ஒவ்வொருவரும ஒரு சந்தாதாரராக விளங்க வேண்டும் என்பதுகூட மேலாண்மையின் அவா அலல. வீதிக்கு ஒரு நபர்-ஒரு இயக்கம, சநதாதாரராக விளங்கினாலே போதுமானது. அதுவே, பல விளக்குகளை ஏறறிடும ஒரு சுடர் விளக்காக ஸப்தகிரியை அமைததிடும. தனது அடுத்த ஆண்டில் அடியெடுத்து வைக்கும இத்தருணத்தில் 'ஸபதகிரி' ஒரு பொது விண்ணப்பம் விடுக்கின்றது சனமானத் தொகையின் மதிப்பை மனதிற் கொள்ளாது சிறந்த புகழ்பெற்ற சமய எழுத்தாளர்களும, நனகு படித்து தாம அறிந்தவற்றை பிறரும தெரிந்து கொள்ளும் வகையில் தனனமபிக்கையுடன் எழுத நினைக்கும இளம் எழுததாளர்களும 'ஸப்தகிரி'க்கு சமயக் கதை கட்டுரைகளை எழுதி அனுப்புதலும, ஸப்தகிரிக்கு விறபனைப் பிரதிநிதிகள் பெருகுதலும், இந்து சமயத்தைப் பறறி தாம் சிறிதளவாவது அறிநது கொள்ள வேண்டும் என்ற அவாவினை ஒவவொருவரும வளர்த்துக் கொள்ளுதலுமே பத்திரிகையினை மேலும வளர துணைபுரியும் எனக் கூறிக் கொண்டு, இதுவரை தான் வளர காரணமாக இருந்துவரும் எல்லோருக்கும 'ஸப்தகிரி' தன் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றது.

# சிங்கப் பெருமாள் கோயில்

'' மீனாக்ருதே கமட கோல நருஸிஹ்ம வர்ணிந
ஸவாமிந் பரச்வதத போதந ராமசந்த்ர |
சேஷாம்சராம யதுநந்தன கல்கி ரூப
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ர பாதம் ||

ஹிரண்யனை சம்ஹாரிக்க இறைவன எடுத்த அவதாரம் 'ந்ருஸிம்ஹ' அவதாரம்.

பல்லாண்டு தவமிருந்து பொல்லா வரம் பெற்ற ஹிரண்யனை, நரனும இல்லாமல் ம்ருஹமுமில்லாமல் இரண்டும் சேர்ந்த நரஸிங்கனுக அவதரித்து, காலைப் பொழுதுமில்லாத மாலைப் பொழுதுமல்லாத அஸ்தமனத்தில் அடிமடியில் கிடத்திக் குடலை உருவி மாலையாய அணிந்து அவனை சம்ஹாரித்த கையோடு வந்து அமர்ந்த ஊர் ''சிங்கப் பெருமாள் கோவில்''.

இக்கோவிலின் பெயரையே ஊரின் பெயராகக் கொண்டுள்ள இவ்வூர் ''சரித்திரம்'' படைத்தது. சென்னை-செங்கற்பட்டு பஸ்-இரயில் வழியில் உள்ளது.

அவதார மஹிமை பேசும் இவ்வூர்க் கோவில் மிகப் பழமை வாய்ந்ததோர் பாடல் பெற்ற தெய்வத்தலம்.

உக்ர ந்ருஸிம்ஹனுகக் காட்சி தரும் இக்கோவில் மூலவரின் ஆஜானு பாகுவான தோற்றம் காண்போரை மெய் சிலிர்க்க வைக்கும். சாந்த மூர்த்தியாக பிரஹ்லாத வரதனும், அஹோபிலவல்லித் தாயாரும் அருள் பாலிக்கும் வகையில் அமர்ந்துள்ளனர். எண்ணிய நல் எண்ணங்கள் யாவும் எண்ணியபடியே ஈடேற்றும் புண்ணியத் தலம்.

'ஜாபாலி' மஹர்ஷிக்குப் பிரசன்னமாகி அங்குள்ள மலைக்குகையில் வநது அமர்ந்துள்ள இறைவனின் (மூலவரின்) பின் பக்க சேவை கிடையாது. தன்னைச் சுற்றி சிறியதோர் மலைப்பிராகாரம் அமைத்துக் கொணடுள்ள இறைவனின் மூலஸ்தானத்திறகுள் மின்சார விளக்குகள் கிடையாது. கற்பூர ஹாரதியில் பொறபாதம் வரை உத்ராக்ஷ மாலை சூடி உக்ரம் அதிகமாய்க் காக்ஷி தரும் ந்ருஸிம்ஹ பகவான் உண்மை பக்தர்களுக்குப் பரிவான பார்வையுடையவன். உக்ரம அதிகம் என்ற காரணத்தினுல் கோவில் கோபுர வாசல் நேராக அமைந்தும், சிறிய தடையொன்று போட்டுள்ளனர்.

கோவிலுக்குத் தென் கிழக்கேயுள்ள சுத்த புஷ்கரணியில் நீர் வற்றிய நாளே கிடையாது. முற்றிலும் வைணவ அந்தணர்களால் முக்கால பூசைகள் எக்காலமும் நடந்துவரும் இக்கோவிலுக்கும் நிலபுலன்கள் ஏராளம் உண்டு.

'சிங்கை' மாறன்-திருவள்ளூர்

வருஷந்தோறும் வைகாசித் திங்களில் பத்து நாட்கள் நடக்கும் பிரம்மோத்ஸவத்தில் புகழ் பெற்ற நாதஸ்வர வித்வான்களின் கச்சேரி ஒரு முக்கிய பங்கு.

வருஷத்திற்கு ஒரு நாள் ஒரு சில மணி நேரம் வரையில் 'வைகுண்ட ஏகாதசி'யன்று திறக்கப்படும். 'வைகுண்ட வாசற்படியில்' நுழைந்து இறைவனேடு வெளி வருதல் மிகப் புண்ணியமாகக் கருதப்பட்டு கணக்கற்ற பக்த கோடிகள் வருகை தருகிறுர்கள்.

அந்த ஒரு நாளும், ஆனி கருடனில் இறைவன் உலா வரும் அடுத்த ஒரு நாளிலும் ஒரு சில மழைத் துளிகளாவது பூமியில் விழுவது யாவரும் கண்ட உண்மை. ஆனி கருடனில் பவனி வந்து அன்று இரவு சுத்த புஷ்கரணிக் கரையில் எழுந்தருளி 'கஜேந்திர மோக்ஷம்' அளிப்பதாக ஐதீகம்.

ஊருக்கு அப்பால் சுமார் ஐந்தாறு மைல்கள் தூரத்தில் 'ஹனுமந்தபுரம்' என்னுமிடத்திலுள்ள 'இரத்தக் குளம்' என்னும் நீர் நிலையில்தான் இறைவன் ஹிரண்ய சம்ஹாரத்திற்குப்பின் சென்று கைகளை அலம்பியதாக வரலாறு கூறுகிறது. தண்ணீர் சிவந்த நிறத்தில் காட்சியளிப்பதும் இதற்குச் சாட்சியளிப்பதாக உள்ளது.

பிரம்மோத்ஸவம் பத்து நாட்களிலும் 'ஸ்ரீ ல ஸ்ரீ. முதலியாண்டான் ஸ்வாமி' திருமாளிகையில் வைணவ அந்தண பக்தர்களில் திவ்ய ப்ரபந்த சேவை தொடர்ந்து நடந்து வருவதுடன் பக்த கோடிகளுக்கும் பாமர ஏழைகளுக்கும் அன்னதானமும் செய்யப்பட்டு வருகிறது.

வளர்ந்து வரும் நவ நாகரீகத்தினுடே பல முன்னேற்றங்களைக் கண்டுள்ள இவ்வூர்.... இன்னும் சில பழைய நம்பிக்கைகளைக் கடைப்பிடித்து வருகிறது என்பது கேள்வி.

'யானைக்கும சிங்கத்திற்கும் விரோதம்-யானை இவ்வூரில் இரவு தங்கினுல் 'கல்'லாகிவிடும் என்று இன்னும் சிலர் நம்புகிறுர்கள்.

'' படியாய்க் கிடந்துன் அடியார்க்கு அடியனுய்
பணி செயது கிடப்பதே எம பணி'

என்று ஆழ்வார் அவர்கள் பாடியருளியதைப் போல் அகன்ற படிகளைக் கொண்ட மலைப் பிராகாரத்தில் அமர்ந்து அங்கே வரும் மூலிகை மணத்தை சுவாசிக்க, ஸர்வ ரோக நிவாரணம் கிடைப்பது உறுதி.

பக்தர்களின் பார்வையில் படாத பழமை வாய்ந்த புணணியத் தலங்களுள் இதுவும் ஒனறுனதால் இக் கணமே புறப்பட்டு வாருங்கள இவ்வூர்க்கோயிலைக் காண; இறைவன் அருளைப் பெற இதுவே தருணம். ★

# சாத்திரங்களும் தோத்திரங்களும்

எல்லாச் சமயங்களிலும் தோத்திர நூல்களும், சாத்திர நூல்களும் இருப்பதை நாம் அறிவோம். தோத்திரங்கள் என்பவை இறைவனுடைய பொருள் சேர்புகழை எடுத்துரைப்பனவாய் அமைவதுடன் அவை ஓதுகின்றவர்க்கு அன்பையும், இன்பத்தையும் பெருகும்படியாக நிற்பவையாய் இருக்கும.

சாத்திரங்கள் என்பவை அத்தோத்திரங்களில் அடிப்படையாக அமைந்திருக்கும் தத்துவக் கோட்பாடுகளை அளவை முறையில் பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் என வகுத்துக் கூறுவன ஆகும்.

தோததிரங்களை இலக்கியங்கள் எனக் கொண்டால் சாத்திரங்களை அவ்இலக்கியத்திற்குரிய இலககணமாகக் கொள்ள வேண்டும். சாத்திரமின்றித் தோத்திரமோ, தோத்திரமின்றிச் சாத்திரமோ இல்லை. எனவே இரண்டையும் கற்றோரே உண்மையில் சமய உணர்வுகளை நன்றாக உணர்ந்து கொள்ள முடியும

"தம்முடைய கவிதைகளைக் கற்பவர்பால் தத்துவ மனப்பான்மையைத் தூண்டித் தோற்றுவிக்கும அளவைப் பொறுத்தே கவிஞர்களின் சிறப்பும் பெருமையும் அமைகின்றன", என்பார் எமர்சன். நம் நாயன்மார்களும், ஆழ்வார்களும் தங்கள் வாழ்க்கையில் பட்ட அனுபவங்களிலிருந்து தோன்றிய எண்ணங்களை நம் மனத்திலும் தோன்றுமாறு பாடியவைகள்தான் தேவார, திவ்வியப் பிரபந்தங்கள்.

எனவே சாத்திர நூலறிவின்றி அததோத்திர நூல்களின் பொருளை முழுமையாக உணர்தல் அரிது. சாத்திரம் கற்பது கடுமையாயினும், அக்கல்வி இன்றியமையாதது என்பதைச் சில பாடல்கள் துணைகொண்டு பார்ப்போம்.

சைவசமய தோத்திரங்களில் சாத்திர நோக்கு ·

சைவ சமயத்தின் அடிப்படை நூல்கள் திருமுறைகளும் மெய்கண்ட சாத்திரங்களுமாகும் திருமுறைகள் தோத்திரங்களாகும். இவற்றைப் பாடிய ஆசிரியர்களைச் "சமயக்குரவர்" என்று வழங்குவர். மெய் கண்ட சிவம் முதல் உமாபதி சிவம போன்றவர் வரை இயற்றிய பனுவல்கள் சாத்திர நூல்களாகும். இவர்களைச் "சந்தானக் குரவர்" என்று போற்றுவர். சிவஞான போதம், சிவஞான சித்தியார், சித்தாந்த அஷ்டகம் போன்ற நூல்கள் சைவ சாத்திர நூல்களாகும். இவை தவிர வேதங்களையும், ஆகமங்களையும் சைவர் பிரமாணமாகக் கொள்வர். இச்சாத்திர நெறிகளுக்கு ஏற்பவே திருமுறைகளாகிய தோத்திரங்களைச் சமயக் குரவர்கள் பாடியருளினார்கள்.

விளையாததோர் பரிசில் வரு
பசுபாச வேதனை ஒண்
தளையாயின தவிரவ்வருள்
தலைவன்னது சார்பாம்
களையார் தருகதிராயிரம்
உடையவ்வ வனோடு
முளைமாமதி தவழும் உயர்
முது குனறடை வோமே!!

என்பது திருஞான சம்பந்தர், திருமுதுகுன்றத்தில் அருளிச் செய்த நட்டபாடைப் பண்ணில் அமைந்த திருப்பதிகத்தின் மூன்றாவதாக வரும் பாடல்.

"எல்லா உலகங்களுக்கும் உயிர்களுக்கும் தலைவனாகிய சிவபிரான் இவ்வுலகத்து அணுக்கமாக விளங்கி நின்று அருள்புரிவதற்கு இடமாக உள்ள திருமுதுகுன்றம என்னும் திருத்தலததையடைந்து அவனை வழிபடுவோம்", என்பது இதன் கருத்து.

இங்குத் தலைவனுக்குக் கூறும் அடைமொழியும் சைவ சித்தாந்த அடிப்படை உண்மைகளை நன்கு விளக்குகின்றன.

இறைவனைத் தலைவன் எனக்குறித்தவர் உயிரைப் பசு என்கிறார். உயிர்களுக்குத் தன்வயம் கிடையாது என்பது அதனால் வலியுறுத்தப்பட்டது. ஏனெனில் பாசம், வேதனை, ஒண்தளை என்பனவற்றால் கட்டப்பட்டுள்ளது.

திரு. மீ. சீனிவாசன், எம்.ஏ. பி.இடி.,
பரமக்குடி.

இவற்றைத் தவிர்ந்து உய்யும்படி அருள்கின்ற இறைவன தலைவனாகிறான்.

தலைவனாகிய இறைவனும், பசுவாகிய உயிர்களும், பாசமாகிய தளையும் என்றும் உள்ள பொருள்கள் எனவேதான்,

" விளையாததோர் பரிசில்வரு"

என்னும் தொடரால் குறிப்பிடுகிறார். இஃது அம்மூன்றோடும் தனித்தனிக் கூட்டி உரைக்கப்படும்.

# கீதையைப் படிக்க வேண்டியவர் யார்?

திரு. கே. ஆர். கிருஷ்ணமாச்சாரி-காங்கேயம்.

பகவான் ஸ்ரீ கிருஷ்ணரால் அருளப்பட்ட உபதேசம் பகவத் கீதை. உலகில் மனிதன் வாழ வேண்டிய நெறியினை உணர்த்துவது கீதை. உலகில் வாழ விரும்பும் மனிதனுககாகக் கூறப்பட்ட அருள் வாசகம் கீதை. ஆனால் பொதுவாக புராணங்களைப் போன்று, புராணங் களோடு புராணமாக பாராயணம் செய்வதறகும் துதிக்கப்படவும் மட்டும் உரியதென்று சிலர் எண்ணுகின்றனர். பெரியோர்கள்தான் அதைப் படிக்க வேண்டும் என்று சிலர் கூறுகின்றனர். இளைஞர்கள் கீதையை வாசித்தால் அவர்களை கீதையை படிக்கவேண்டிய வயதா இது? என்று கூறுகின்றனர். அவர்கள் கருத்துப்படி கீதை இளைஞர்கள் படிக்கக்கூடாதாம். மேலும் மனதில் அமைதி இல்லாத நேரத்தில் கீதை அமைதி அளிக்கக்கூடியது என்றும் அவர்கள் ஒப்புக்கொள்கின றனர். இளைஞர்கள் ஏன் படிக்கக்கூடாது? அதற்கு அவர்களிடமிருந்து தக்க காரணம் இல்லை. நாகரீக வாழ்வில் மூழ்கிவிட்ட நாம் நமது கலா சாரங்களை மறந்து விடுகிறோம். கீதையை ஓர் இளைஞன் படிப்பது அநாகரீகம் என்று கருதுகின்றனர் போலும். அதாவது அவர்கள் கருத்துப்படி நமது இலக்கியங்களை நாம படிபபது இழுக்கா? சொல்லப் போனால் கீதை எழுதப்பட்டதே இளைஞர்களுக்காகத்தான். அதுவும் உபதேசிக்கப்பட்டதும் இளைஞனுக்குத்தான். இளைஞன் இனி வாழவேண் டியவன். வாழவேண்டியவனாகிய அர்ச்சுனனுக்குத்தான் கீதை உபதேசிக் கப்பட்டதேயன்றி வாழ்ந்து முடிந்துவிட்டவர்களுக்கல்ல. பீஷ்மருக்கோ அல்லது மற்றவர்க்கோ கீதை உபதேசிக்கப்படவில்லை. அவ்வாறு இருக் கும்போது இப்போது மட்டும் இளைஞர்கள் படிக்கக்கூடாது என்று ஏன் தடுக்கின்றனர்? எனவே உலகில் வாழவிரும்பும் ஒவ்வொருவரும் கீதையை அவசியம் படிக்கவேண்டும்.

தன்னம்பிக்கை யாருக்கு இருக்கவேண்டும்? இளைஞனுக்குத்தான். அதை அழகாக உபதேசிக்கின்றார் கீதாசார்யன்.

உத்தரேத் ஆத்மனா ஆத்மானம் ந ஆத்மானம் அவஸாதயேத்
ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்துரா ஆத்மைவ ரிபுராத்மன :

தன்னைத் தன்னாலேயே உயர்த்திக் கொள்ளவேண்டும். தன்னை ஒருவன் தாழ்த்திக் கொள்ளக்கூடாது. தனக்குத் தானே நண்பன் தனக்குத் தானே எதிரி. எப்படி? தன்னை உயர்த்திக் கொண்டால் தனக்குத் தானே நண்பன். தன்னைத் தாழ்த்திக் கொண்டால் தனக்குத் தானே எதிரி. அதாவது நண்பனும் எதிரியும் வெளியில் இல்லை. உனக் குள்ளே இருக்கின்றார் என்கிறார். திறமையோடு கர்மம் புரிவதை கீதையின் கர்மயோகம் வலியுறுத்துகின்றது.

எனவே இளைஞர்கள் சிந்தித்துக் கீதையில் ஈடுபடுங்கள். மூல மான வடமொழி சுலோகங்களைப் படிக்க வேண்டுமே என்று எண்ண வேண்டா. அதன் பொருளை அறிந்து கொண்டால்கூட போதுமானது. கீதையைப் படியுங்கள். அதன் வழி நடந்து செல்லுங்கள். உலகில் வெற்றிகரமாக உலா வருவது உறுதி.

கீதை படிப்பவனையும் அறிந்தவனையும் மதிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். நம்முடைய மத நூல்களை படிப்பதைப் பெருமையாக கருத வேண்டும். கண்ணனைப் பின்பற்றுங்கள்; உயர்வீர்கள்.

பாசத்தாற் பிணிப்புற்றுக்கிடக்கும் உயிர்களைத் தன்னுடைய ஆக்கல், அழித்தல், காத்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐநதொழில்களால் பக்குவமடையச் செய்கிறான. அப் பககுவ நிலையில் தன்னோடு உயிர் களுக்குள்ள தொடர்பை விளக்கி ஆட்கொள்வான். அப்போது உயிர் கள் தளைகளினின்றும் முற்றிலும் நீங்கி, முதல்வனைத் தலைப்பட்டு உணரும் அப்போது பேரினபத்தில் திளைத்து இன்புறுகிறது

இதனையே,

'' பாசவேதனை ஒண்தளை ஆயின
தவிரருள் தலைவன்''

என்னும் தொடரால் குறித்தார்.

இவ்வுலகத்தைக் காரணகாரிய நிய திக்குட்பட்டு மாற்றம் எய்திவரும் உள்பொருள் என்பது சித்தாந்தம். இதனைத் திருமுதுகுன்றத்தின் வளத் தினைக் குறிக்கிறார். திருமுதுகுன்றத் தில் அளவில் பேரொளியுடைய கதிர வனும், அக்கதிரவனால் ஒளிப்பெற்றுக் கலைவளரும் பிறையும் தவழ்கின்றன.

இங்குக் கதிரவன் என்பதால் இயற்கையில் முற்றுணர்வுடைய முதல்வனையும், அம்முதல்வனால் விளக்கம் பெறும் செயற்கைச் சிற் றறிவுடைய உயிர்களின் இருப்பை முளைமாமதி எனபதாலும் குறிக் கிறார்.

முதல்வன் தானே தனித்துநின்று, அறிந்து அறிவிப்பவன்: உயிர்கள், அறிவிக்க அறிவனவாய் சார்ந்த தன் வண்ணமாய் நின்று அறிவன. இவ் உண்மைகளை பாடலில் அழகாக எடுத் துரைக்கிறார் திருஞானசம்பந்தர். இவ்வாறு நுட்பமாக உள்ள பொருளை அறிய சாத்திர அறிவு வேண்டு மன்றோ!

வைணவத் தோத்திரங்களில் சாத்திர நோக்கு :

வைணவத்திலும் சேதனன் (பசு) அசேதனம் (பாசம்) ஈஸ்வரன் (பதி) என்னும் முப்பொருள் உண்மை

(தத்துவத்ரயம்) அடிப்படையாகக் கூறப்படுகிறது. ஈசுவரதத்துவத்தைக் குறிக்கும்போது (ஸர்வவ்யாபகன், ஸர்வநியாமகன், ஸர்வரக்ஷகன்) கடவுள், இயவுள், காப்பாளன் எனக் குறிக்கிறது.

உயிர்களுக்குத் துன்பமும (பந்தம்), இன்பமும் (மோக்ஷம்) ஏற்படக் காரணத்தை, வைணவ சித்தாந்தம்,

'' பற்றுக்கு அடி ஐம்பொருள் உணர்வு
இல்லாமை
விட்டுக்கு அடி ஐம்பொருள் உணர்வு
உடைமை''

என்று கூறுகிறது. இறைநிலை, உயிர்நிலை, தகக நெறி, வாழ்வினை, பகையியல்பு என்பதை அர்த்த பஞ்சகம் என்னும் ஐம்பொருள்களாம் என்பதை,

'' மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்
நிலையும்
தக்க நெறியும் தடையாகித் தொக்
கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும்
குருகையர்கோன்
யாழினிசை வேதத்தியல்''

என்னும் தனியனுல் உணரலாம் பர ஸ்வரூபம் என்னும் இறைநிலையை பரத்வம், வியூஹம், விபவம், அந்தர்யாமித்வம, அர்ச்சாவதாரம் என்பனவற்ருல் உணர்த்துகிறது ஸ்ரீவைஷ்ணவம்.

பரத்வம என்பது இறைவன் வைகுந்தத்தில் வாழும் நிலை. இதனைக் கடந்த நிலை எனலாம். திருபபாற்கடலில் பள்ளி கொண்ட நிலை வியூகம் எனப்படும். தீயோரை அழிதது நல்லவர்க்கருள் செய்திட மேற்கொண்ட அவதாரங்கள் விபவம் எனப்படும. எல்லாப் பொருள்களிலும் இறைவன் ஊடுருவி நிற்கும் நிலை அந்தர்யாமித்வம் எனப்படும். அன்பர்களுக்காகத் திருக்கோயில்தோறும் திருவுருக் கொண்டமை அர்ச்சை எனப்படும். இதனைத்தான் ஆண்டாள் திருப்பாவையில்,

''அம்பரம் ஊடறுத்தவன்'', என்று பரத்வத்தையும், ''பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்'' என்பதால் வியூஹத்தையும், 'நந்தகோபன் குமரன், யசோதை இளஞ்சிங்கம்', ''ஒருத்தி மகனுய் பிறந்து, பேய்முலை நஞ்சுண்டு'' என்னும் தொடர்களால் விபவத்தையும், 'ஆழிமழைக்கண்ணு' என்னும் பாட்டில் அந்தர்யாமித்வத்தையும், கண்ணன் நந்தகோபன் திருமாளிகையில் எழுந்தருளிப்பதாகக் கூறுவதால் அர்ச்சையையும் கூறிஞள் என்று உணர்தல் வேண்டும்.

''இறைவன் இலட்சியமாக மட்டுமன்றி அவனை அடைவதற்குரிய கருவியாகவும் அமைகிருன்'' என்பது ஸ்ரீ வைணவக் கொள்கை. எனவேதான் கண்ணனை அடைய விரும்பிய கன்னியர் தம்நோன்பு நிறைவேறுவதற்குக் கண்ணனின் துணையை வேண்டுகின்றனர்.

ப்ராப்யம் எனப்படும் பயனைப் பெற உபாயமாகப் ப்ராபகம் என்னும் சரணுகதி நெறியையும் கொள்வது வைணவக் கோட்பாடு. இதனை ஆண்டாள் ''நீராடப் போதுவீர்'' என்பதால் பயனைக் கூறிஞள். இங்கு நீராடுதல் என்பது கண்ணனுடன் கலத்தல் என்பதைக் குறித்தது. இப்பயனை அடைந்திட அவனை பக்தியினுல் சரணுகதி செய்வோம் என்கிருள் ஆண்டாள். சரணுகதி செய்திட ஆறுகூறுகளை வகுத்துரைக்கிறது ஸ்ரீவைணவம். அவை 1.இறைவனுக்கு விருப்பமானவற்றை விழைதல் 2. விருப்பமில்லாதவைவற்றைக் களைதல் 3. இறைவன் தன்னைக் காப்பான் என்னும நம்பிக்கை 4. இறைவன் காவலை வேண்டி நிற்பது 5. இறைபணிக்குத் தன்னை அர்ப்பணித்தல் 6. தான ஒன்றுமில்லை என எண்ணுவது.

'' பாற்சோறு மூட நெய்பெய்து முழங்கை
வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோ
ரெம்பாவாய்''

என்பதால் கண்ணனுக்கு விருப்பமானவற்றையே விழைந்து,

தீக்குறளைச் சென்ருேதல், செய்யாதன செய்தல், ஆகிய இறைவனுக்கு விருப்பமில்லாதனவற்றை விலக்கி,

'' எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும்
உன்தன்னுேடு
உற்ருேமே யாமாவோம்''.

என்பதால் இறைவனே தன்னைக் காப்பான் என்னும் உறுதியான நம்பிக்கையும் கொண்டு,

'' சீரிய சிங்காசனத்திருந்துயாம் வந்த
காரியம் ஆராய்ந்து அருள்''

என்பதால் இறைவனின் காவலை வேண்டி,

'' உனக்கே ஆட்செய்வோம்''

என்பதால் இறைபணிக்குத் தன்னை அர்ப்பணித்து,

'' அறியாத பிள்ளைகளோம்''

என்பதால் தான் ஒன்றுமில்லை என எண்ணிச் சரணடையும் நிலையாகிய வைணவக் கோட்பாட்டை விளக்கித் தருகிருள் ஸ்ரீ ஆண்டாள்.

முடிவுரை:

''சிறந்த தத்துவஞானியல்லாத எவரும் ஒரு பெருங்கீர்த்தி மிக்க கவிஞராக விளங்கியதில்லை'' என்று கூறுவார் கோல்ரிட்ஜ் என்னும் அறிஞர். நம் நாயன்மார்களும் ஆழ்வார்களும் சிறந்த தத்துவ ஞானிகள் என்பதை அவர்கள் பாடல்களைச் சாத்திர கண்கொண்டு நோக்கினுல் தெளிவுறும்.

தோத்திரப் பாடல்களில் வரும் நுட்பமான தொடர்களை அளவு படுத்தியுணர சாத்திரம் தேவைப் படுகிறது. எனவே சாத்திர அறிவின்றித் தோத்திரப் பாடல்களைப் படிப்பது உப்பற்ற பண்டத்தை உண்பதுபோல்வதாகும். எனவே சாத்திரமும் கற்று, தோத்திரமும் படித்து உய்வு பெறுவோமாக.

✱

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. பை. |
|---|---|---|
| அன்னமய்யா ஓர் அறிமுகம் | ... | 1–00 |
| பகவத் சந்தேஸம் | ... | 0–50 |
| இந்து சமயக் கையேடு | ... | 1–50 |
| ஹனுமான் | ... | 0–50 |
| கண்ணன் பேசுகிறான் | ... | 0–50 |
| மாங்கல்ய விருத்தி ஸ்தோத்திரம் | ... | 0–10 |
| சித்திர சுப்ரபாதம் | ... | 8–00 |
| ஸ்ரீவேங்கடேஸ்வர சுப்ரபாதம் (பொருளுடன்) | ... | 0–50 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | ... | 0–15 |
| சித்தாந்த சங்கரஹம் | ... | 2–50 |
| திருவேங்கட கலசம் | ... | 0–15 |
| சித்திரத் திருப்பாவை | . | 8–25 |
| ஏழுமலை யாத்திரை | ... | 0–75 |
| ஹனுமன் கதை | ... | 2–00 |
| திருமலை வழி காட்டி | ... | 0–10 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கல்யாணம் | ... | 11–50 |
| கண்ணன் கதை | ... | 2–00 |
| நித்யாநுஸந்தானம் (வடகலை) | ... | 4–00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | ... | 4–50 |
| அபிமன்யு | ... | 2–00 |
| கிருஷ்ணனும் நரகாசுரனும் | ... | 2–00 |
| பகவத் கீதை | ... | 2–00 |

## ஆங்கிலம்

| | | Rs. Ps. |
|---|---|---|
| Administration of Temples | . | 5—00 |
| Alamel Mangapura | .. | 0—25 |
| Ekantaseva | .. | 5—00 |
| Govinda brochure | .. | 3—00 |
| History of Tirupati Vol: II | .. | 15—00 |
| Melodies of staff notation | . | 10—00 |
| Lord Venkateswara & Alwars | .. | 1—00 |
| Acharya Hridayam | .. | 8—25 |
| Theory of Knowledge | .. | 5—00 |
| Tirupati Sri Venkateswara | .. | 40—00 |
| S.V. Suprabhatham with meaning | .. | 0—50 |
| Heart of Bhagavatham | .. | 3—00 |
| S.V. Sachitra Suprabhatham | .. | 11—00 |
| Tirumala Temple | .. | 80—00 |
| Pilgrimage to Uttarakhanda | .. | 3—75 |
| Tiruppavai | | 10—00 |
| Vision of Aryan Glory | .. | 1—50 |
| Uddavageetha | .. | 5—00 |
| The Wise Minister & other stories | .. | 1—00 |
| Sree Venkateswara | . | 1—00 |
| Vishnu Sahasranamam 999 (Namams) | .. | 1—00 |
| Harischandra | .. | 1—00 |
| Kardama & Devahuti | . | 1—00 |
| Maharshi Valmiki | .. | 2—00 |
| Druva | . | 2—00 |
| Bhishma | .. | 2—00 |
| Vedavyasa | .. | 2—00 |
| Tenali Ramakrishna | .. | 2—00 |
| Ganesha | . | 2—00 |
| Thyagaraja | .. | 2—00 |
| Drowpadi | .. | 2—00 |
| Bhageerada | .. | 2—00 |
| Prahlada | | 2—00 |
| Andal | .. | 2—00 |
| Kalidasa | .. | 2—00 |
| Vadiraja | . | 2—00 |
| Pillai Lokacharya | .. | 2—00 |
| Dhadhichi | .. | 2—00 |
| Nachikata | . | 2—00 |
| Namadeva | . | 2—00 |
| Garuda | .. | 2—00 |
| Ramanujacharya | | 2—00 |
| Narada | . | 2—00 |
| Vedantadesikaru | . | 2—00 |
| Why am I Hindu? | .. | 1—50 |
| Purushasuktham | | 2—00 |
| History of Tirupati Vol. I | . | 15—00 |
| Homage to Kalankari | . | 120—00 |
| Yoga & Yoga | | 2—00 |
| Viswamithrudu | | 2—00 |
| Idle child | | 0—05 |

## வடமொழி

| | | ரூ. பை. |
|---|---|---|
| எஸ். வி. அஷ்டோத்ரம் | .. | 0–62 |
| எஸ். வி. சுப்ரபாதம் | .. | 0–12 |
| தத்வ ஸங்க்யானம் | .. | 2–00 |

---

குறிப்பு : பிரதிகளுக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**THE WELFARE OFFICER**
**Publication Wing (Administrative Building)**
**T. T. D. TIRUPATI.**

# ★ நான் அறிந்த திருமலை ரகசியம் ★

த்வதகோ புராகரசிகராணி நிரீக்ஷய
மாணு.
ஸவாகாபவாக பதவீம பரமாம
ச்ரயநத: |
மர்தயா மநுஷ்யபுவநே மதிமாச
ரயந்தே
ஸ்ரீவேங்கடாசலபதே தவ சுப்ரபாதம் ||

தொனறு தொட்டே இமமாலவன இருக்கும வேங்கடமலை ஸவர்க துலயமாகவே கருதப்பட்டு அதற் கதிபதியாக வேங்கடவனையே இருததி பூஜிதது வழிபட்டு வநதுள் ளனர்.

வெகு காலம் தவமிருநது சுவாகத் திற்குச செலலும பேறு பெறற முனி வர்கள் சிலரை அழைததுச செல்ல அமரா புரியிலிருநது புஷபக விமா னம் பூமிககு வநதது.

தேவர்களுக்கொப்பான சுவர்கக வாசத்தை எணணி மகிழந்தவாறு இறையின் மஹிமைகளைப் போற்றிய வணணம் அவவிமானத்தில் பயணப் பட்டனா தவமிருநத முனிபுஙகவா கள்.

ஸஹ்யம, இமவான, மேருபோன்ற பல பாவதஙகளையும ஆறு, குளஙகளை யும் தாணடி வேஙகடமலை சமீபமாக வரும்போது ... திருமலேசனின் கோபுர உசசியைக கணடனர். இதோ சுவர்கம வந்துவிட்டது என எணணிக கொணடிருந்தவாகள் மனம் இநத வேஙகடவனின கோபுர உச்சியைக் கணட மாத்திரத்தில் தஙகளது சுவர்க பதவியையும மறந்து 'ஆஹா! இதுவலலவா உண மையான சுவாகம. இவரல்லவா அநத சுவாகாதிபதி. இவரைக காண வனரோ நாம பயணபபட்டது இவர் இஙகு இருக்கினறுரே இதைவிடுதது வேறு சுவாகம ஏது? வேங்கடவன இருககுமிடமே சுவர்கம. வேங்கட வன் இல்லாத சுவர்கம நமக்கு வேண டாம்' என ஒவ்வொருவரும எணணி புஷ்பக விமானத்திடம் 'மனித புவ னத்திலேயே சுவர்கம் எதற்கு' எனக் கூறி தங்களுககுக் கிடைககப் பெறற சுவர்க பதவியைத் துறநது இந்த வேங்கடாத்ரி மலையில இறங்கி வசிககத் துவங்கினர்'' எனறும 'வேங்கடேச சுப்ரபாதம' கூறுகின் றது.

அபபேர்கொத்த மஹிமைகள நிரம்பிய முனிவர்கள இத்திருமலை யைச் சுற்றியுள்ள வனங்களில அமர்ந்து உலக நலன் கோரி தவ மிருநது வருகின்றனா எனறும ஏனைய தகுதிகள் நிரம்பிய முனிவர் கள் இனறும அதிகாலையில் கபில தீர்த்தததில் காலைக் கடன்களை முடிதது குளைஹ மார்க்கமாய் வேங கடமலையை அடைநது வேஙகட வனுககு சுப்ரபாதம பாடித் துயில் எழுபபுகின்றனர் என்றும நம்பப்படு கினறது.

---

**திரு S. சந்திரமௌலி,**
***திருப்பதி***

---

இதுவுமல்லாமல் பிரதி தினம இரவு வேளையில் தேவ ராஜனை இந் திரன் இககோயிலை அடைந்து இவ ருக்கு பூஜா ஆராதனைகள் செய்து வழிபடுவதாகவும் ஒரு கருத்து நிலவு கிறது.

அதறகுச் சான்று போல் இன்றும கூட திருமலைக் கோயிலில் இரவில் (தீரமானம்) ஏகாநத சேவை முடிநத பிறகு எககாரணததைக கொணடும் கோயில் கதவுகள் திறககபபடா இதனுடைய சாவி இரவு பூஜை செயத பட்டாசாரியார் மறறும கொலலவாளளு எனறழைககப்படும் இடையர் வமசததை சாாநத ஒரு வரிடமுமாக இரு சாவிகளால பூட டித் திறக்கப்படும்.

மற்றுமல்லாமல் இரவு கோயிலில் பூஜை செயது கோயிலை பூட்டிய அர்ச்சகர் மறுநாட்காலை எககாரணம் கொணடும் கோயிலைத் திறகக வர மாட்டார். ஏனெனில் தேவேந்திரன் பூஜா பாத்திரங்களால் பூஜை செயத தறகறிகுறியாக பூஜா பாத்திரங்கள் மாறுபட்டிருநதால 'முதல நாள் வைத்த பாத்திரஙகள மாறுபட்டுள் ளதே. இது இப்படி இருந்ததே. அது அப்படி இருநததே' என்ற வேண டாத எணணங்கள தோன்றி தேவ ரஹசியத்திற்கு பங்கம் வராதிருக்க வேணடி இப்பழக்கத்தை மேற்கொண டுள்ளனரோ என எணண வைக கிறது.

அனறுடம இநத கொல்லவாளளு என்பவாகளிலொருவர் புனிதராய் அதிகாலையிலேயே சாவிப்பெட்டி யுடன கையில தீப்பநததுடன காலை சுப்ரபாத பூஜை செயய வேணடிய அர்ச்சகரை அழைத்து வருவார்.

ஆதிவராஹமூர்த்தி கோயிலுக் கருகிலுளள அர்ச்சகா மனையிலிருந்து வளைநத கமபிபோல் நீணடதும் பிடி யில் பட்டு நூலால் சுற்றப்பட்டது மான திருமலைக் கோயிலின சாவியை சுமந்துவரும அர்ச்சகரை கையில் தீபபநததுடன் வைகுணட வாயிலை திறப்பதற்கு அழைத்து வரும் காட் சியை அந்த அதிகாலையில் காணும போது எப்பேற்பட்டவர் மனதிலும் பகதி பரவசம் தோனறுமலிருக்காது.

ஈர உடையுடன் அதிகாலையிலேயே பல பல கோரிக்கைகளுடன மால வனைத் தரிசிகக பயபக்தியுடன் கோவிநதா! கோவிந்தா! என்ற வணணம நின்றிருக்கும் பக்தாகள இடையில் வழி ஏறபடுத்திக கொணடு புகுந்து அாச்சகா மஹாத்வார கோபுரத்தை (பிரதான வாயிலை) நெருஙகும சமயம் கண... கண வெனற மணி சபதம அந்த திருமலை முழுவதும எதிரொலிக்கும். ''அஹோ! தேவர்களே! நீஙகள் வேஙகடவனை பூஜிததது போதும. மானுட பகதாகள அவரை சுபர பாதம் பாடித் துயில் எழுப்ப வநது கொணடிருககின்றனர். நீங்கள் உஙகள யதா ஸதானத்தை சேருங் கள்' எனற எச்சரிக்கை மணியா இது என்ற திகைப்புடன கோயிலினுட் சென்று சுப்ரபாதம் பாடி ஆனந்த மாய் விஸ்வரூப தரிசனததில் பாவங் களைப் போககும மாயவனை வேங்க டேஸ்வரனைக் கணடு ஆனந்தக் களிப் பெயதுவது தினமும் நடைபெறு வதேயாகும.

# கடவுள் நிலை

'இந்து சமயம்' என்பது இவ்இந்திய நாடு எங்கும் உள்ள நன்மக்களால் எத்தனையோ ஆயிர ஆண்டுகளுககு முன்னே தொட்டுக கைகொள்ளப்பட்ட கடவுள கொள்கையாகும். அஃது அவர்களை அறிவிலும் ஊக்கத்திலும் ஒழுக்கத்திலும் மேலேறச் செய்து, மற்றைய நாட்டவர்கக இல்லாத் தனிப்பெருஞ் சிறப்பினை அவர்கட்கே தநது மற்றையசமயங்களுக்கெல்லாம் மேலான தனி நிலையில் வைகி விளங்குவது.

அது, இநதிய நன்மக்களை அறிவில் மேமபட்டு விளங்கச் செயதது எப்படியெனுற் கூறுதும்; இந்நிலவுலகத்தில் எங்கும் உள்ள எல்லா மக்களும் அவர்கள் நாகரிகத்திற் சிறநதிருப்பினும் நாகரிகம் இல்லாக் காட்டு வாழ்க்கையிலிருப்பினும், எல்லாரும் 'கடவுள் ஒருவர் உண்டு' என்னும் உணாச்சியும் அக்கடவுளை வணங்கும் விருப்பமுமு உடையராய் இருக்கின்றனர். மக்கட் பிரிவினர் எல்லா வரலாறுகளையும் மிக நுணுக்கமாக ஆராய்ந்து வரலாற்று நூல்கள் எழுதியிருக்கும ஆங்கில ஆசிரியர்கள், 'கடவுளுணர்சசியில்லாத ஒரு மக்கட் கூட்டத்தாரை ஓரிடததிலுங் காண்டல் இயலாது' எனறு முடிவு கட்டிச் செல்லுகினறுர்கள். நமது நாட்டிலும் மிகத் தாழ்நதோர் முதல் மிக உயாந்தோா ஈருக உளள எத்திறத்தவருங் கடவுள உணர்ச்சியும், அவ்வுணர்ச்சிக்கு ஏறற பலவகையான வணகக முறைகளும் உடையராய் இருத்தலைக காணகிறேம். ஆகவே கடவுளுணாச்சியுங் கடவுள வணககமும் இல்லாமல் மககளாய்ப் பிறந்தவர்கள் உயிர் வாழ்தல என்பது இயலாது என விளங்கும்.

இனி, மக்கள் எல்லாரும் ஏன் இங்ஙனம் கடவுள் உணர்ச்சியுங கடவுள் வணக்கமுமு உடையராயிருக்கின்றன ரென்றுல், அவர்கள் அனைவரும் இந்த உடம்பின் துணையும், இநத உடமபு உலவும் நிலத்தின் துணையும் வேணடியவர்களாயிருக்கின்றனர். வியப்பான இநத உடம்பையும், இந்த உலகத்து பொருள்களையும் மககள் தாமாகவே உண்டாக்கிக் கொள்ள வல்லவாகளாய் இல்லை. ஆகவே இத்தனை வியப்பான பண்டங்களையுந் தமக்கு ஆக்கித் கொடுக்கத் தக்க பெரு வல்லமையும பேரறியும பேரிரக்கமும் உள்ள ஒரு முழு முதற் சக்தி கட்டாயம் இருக்க வேணடுமென்னும் உணாச்சி எலலார் உள்ளங்களிலும் இயற்கையாகவே தோன்றி நிற்கின்றது

இனி எவராலும் படைக்க முடியாத இத்தனை உடம்புகளையும இத்தனை நிலங்களையும் இத்தனை அரும் பொருட்களையுந்தமக்குப் படைத்துக கொடுத்த எலலாம் வல்ல இறைவன் ஒருவன் உணடு எனனும உணாசசி வந்தவுடனே, அவனைக் காணுதற்குங் கண்டு வணங்குதற்கும எல்லாருக்கும் பேரவா உண்டாதலும் இயல்பேயாம். சலவைக் கலவில் திருத்தியமைக்கப் பட்ட மிக அழகான ஓர் உருவத்தையேனும் பலவண்ணங்களாற் குழைத்துத் திறமாக எழுதப்பட்ட ஓர் ஓவியத்தையேனும், வானத்தில் பறக்கும் ஒரு மயிற் பொறியையேனுஞ் சுவைத்த சொல்லும், பழுத்த பொருளும் நிறைநத ஒரு நூலையேனும் இயற்றிய கைத்தொழிலாளரும் நல்லிசைப் புலவருநதனது காலத்தில உயிரோடியிருககினறனா எனறு தெரிந்தால் அவர்களைக காணடிற்குங் கணடு வணங்குதறகும் மககள எவ்வளவு விழைவுடையராய விரைநது செல்கின்றனா' செனறு, அவர்களை மனம் உருகி வணங்கி வாழ்த்தி எவ்வளவு இன்புறுத்துகின்றனர்! சிற்றறிவு உடைய மக்கட் பிறவியெடுத்தாரிலேயே சிறிது சிறந்த அறிவு வாய்நத கைத்தொழிலாளரையும் நல்லிசைப் புலவரையும், அவர் அமைக்கும் உருவ அமைப்பு நூல் அமைப்பின் அழகால் மனம் இழுக்கப்பட்ட மக்கள் தேடிச சென்று கண்டு வணங்கப் பேராவல கொளளுவார்களானுல், எவராலும் அமைகக முடியாத எணணிறநத நிலஙகளையும, உடம்புகளையும, எல்லையற்ற உலகத்து பொருட்களையும நாம் கேளாமலே அமைததுக கொடுத்து மற்றைய தொழிலாளரும் புலவருமு அழிந்தொழிவது போல அழிநதொழியாமல் எக்காலத்தும் எவ்விடத்தும நமமோடு உடனிருக்கும் எல்லாம் வல்ல பெருமானைக காணபதறகுங் கண்டு வணங்குதறகும மககளாகிய நாம் இன்னும் எவ்வளவு மிகுநத பேராவல் உடையவர்களாய் இருக்க வேணடும். மக்களில் சிறந்தவர்களை வணங்குதலால் நமக்கு இன்பம் உணடாகுமானுல் எல்லாம் வல்ல இறைவனைக கணடு வணங்குதலால் நமக்கு இனனும் எவ்வளவு மிகுதியான அனபுமு இனபமும் உணடாகல் வேணடும!

**திரு. S ராஜகோபால்**
*அம்மாண்டிவிலே.*

இனி விருப்பு வெறுப்பில்லாக கடவுள், தன்னை மக்கள் வணங்கல் வேண்டுமெனவுந தனககுத் திருக கோவில்களும் திருவிழாக்களும வேணடுமெனவும் விரும்புவனரோ! என சிலர் ஏளனம் செயவர். கடவுள் தமமை மககள வணஙகல் வேணடுமெனத தமது திருவுள்ளத்திற கருதுவது, அதனுல் அவர் தமககு ஒரு பெருமை தேடிக் கொள்வதறகு அனறு. கடவுள் 'ஒப்புயர்வறறு செல்வமுமு அறிவுந தலைமையும் வலிமையும் உடையவர்; அவரை வணஙகாது ஒழியின் நமககு தீங்குணடாம்' எனக் கருதி அவரை அச்சத்தால வணஙகுவோர் தாழ்ந்த நிலையினர். 'மேற்கூறிய வளங்களையுடையனுதலுடன், எமபெருமான் ஒன்றுக்கும் பற்றுத எளியேனிடத்தும் அளவிறநத அன்பும் இரககமும் உடையன்' எனக கருதி அவரை அன்பினுல் வணங்குவர் உயர்ந்தோர். ஏனெனில் கடவுள் எலலையறற செல்வமும் அறிவுந் தலைமையும வலிமையும் மட்டுமே உடையவரல்லர்: அறி

# ஆராவமுதனின் சித்திரைத்தேர்

திரு. எல். ராஜகோபாலன், எம்.ஏ. பி.டி. - குடந்தை.

ஆழ்வார்கள் பாடிய நாலாயிர திவயப் பிரபநதம ஸ்ரீவைஷ்ணவர்களின் செல்வமாகும. சுமாா 1,200 ஆணடுகளுக்கு முன்னுள இநதப் பிரபநதம வழகசொழிநது மறைந்துவிடடது. ஆனல் திருக்குடந்தை ஆராவமுதனைப பறறி நமமாழவார் பாடிய 'ஆராவமுதே' எனத் தொடங்கும் ஒரு பதிகம மட்டும் இககோயிலில அனுசநதிககபபட்டு வந்தது. இங்கு யாத்ரீகராக வந்த ஸ்ரீமந்நாதமுனிகள் தேனினுமினிய இப்பாசுரங்களைக கேட்டு மிகவும ஆச்சர்யமடைந்தார். கடைசி பாசுரத்தில் 'ஒராயிரத்துள்-இப்பத்தும' என்று இருப்பதைக கேட்டு மற்ற பாசுரஙகளைத் தேடிக் கணடு பிடிப்பதில் மிகவும ஈடுபட்டார். கடைசியாக ஆழ்வார் திருநகரிக்கு வந்து நமமாழவாா சன்னதியில் கடும தவமிருந்து, அதன பயனுக நமமாழ்வார் பிரதயக்ஷமாகி திருவாய்மொழி முதலான பிரபநதங்கள் எல்லாவற்றையும் உபதேசித்தருளினுர். இவ்விதம் திவ்யப் பிரபந்தம உலகிற்கு மீணடும் கிடைத்தது இப்பெருமாள் தன்னுடையதான பத்து பாசுரங்களைக காத்து முழுபிரபந்தத்தையும் வெளியிடச் செய்ததால் அடியாா இரவை 'ஆராவமுதாழ்வாா' என்றும 'திராவிடச்ருதி தர்சக.' எனறும் போற்றுகிருர்கள்.

திருவேங்கடததிலுள்ள திருவேங்கடமுடையான இஙகு ஆவிர்பவித்திருக்கிருர் என்பது இஙகு எழுந்தருளியிருக்கும் பாதாள ஸ்ரீநிவாசன் வரலாற்றிலிருநது தெரிகிறது ஸ்ரீலட்சுமி தேவியின் கோபத்துககுப் பயந்தவர்போல திருமலையிலிருந்து இங்கு வந்து புதரில் ஒளிந்திருககத் தாயாரும் இவரைத் தேடி வநது இங்கு இவரைக் காணுதபடியால் வருத்தமுற்று வெகுகாலம் இங்குத தவம் செய்து பெருமாளை மணந்தார் என்பது இநத வரலாறு.

திருமங்கையாழ்வார் இவ்வெம்பெருமானை மிகுநத பிரேமையுடன் அனுபவித்திருக்கிருர். பற்பல திவ்ய தேசததெமபெருமான்களையெல்லாம பாடிப்பாடி அலற்றுமபோதெல்லாம் நடுநடுவே சிரம பரிகாரமாக 'அகமேதத்திற்கும்' அமுதனை நினைந்து பாடியுள்ளாா எனப் பெரியோர்கள் கூறியுள்ளனர். இவ்வாழ்வாா தான அருளிச்செய்த ஆறுபிரபந்தங்களிலும் இப்பெருமாளைப போற்றியுள்ளார். ரத வடிவத்தில் அமைந்த 'திருவெழுகூற்றிருக்கை' எனற ஒரு தனி பிரபந்தமே இப்பெருமாளைப பறறியது இவ்வெம்பெருமானுக்குச் 'சித்திரத் திருத்தேர்' என்ற சிற்பக் களஞ்சியமானத தேரைச் செய்து வைத்து அதை மங்களாசாஸனம செய்யும வகையில மேற்கூறிய பிரபந்தத்தை அருளிச் செய்தார் என்பது ஐதீகம்.

பல நூற்ருணடுகளாக ஓடிய இத்திருத்தேர் கடைசியாக 1936ம வருஷம ஓடியது. மககள வளமம, வல்லமையும், வசதியும், வாய்ப்பும பெற்றிருந்தும் தற்காலததில் இததேரோடடம் நிகழாமல் இருப்பது நமது பெருஙகுறையாகும. தறபொழுது எழுந்தருளியிருககும் ஸ்ரீரஙகம பெரியாஸ்ரமம ஸ்ரீமத ஆணடவன ஸவாமிகள இப்பெருமாளிடத்தில் எல்லையில்லா ஈடுபாடு கொணடார்கள. இம்மகான தற்பொழுது இத்தேரோட்டம நடைபெறவேண்டுமென திருவுள்ளம பற்றியுள்ளார்கள.

நடைபெறும் ரக்தாக்ஷி வருஷம் சித்திரை மாதம் (மே - 1984) நடைபெறும் சித்திரைப் பெருவிழாவில் இத்தேரோட்டம் நடைபெற முயற்சிகள செய்யப்படுகினறன. இத்திருத்தேர் சுலபமான முறையில் ஓடிவர நவீன முறையில் இரும்பு அச்சு, இரும்புச் சக்கரங்கள் பொருத்தித் தர திருச்சி பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் லிமிடெட் ஸ்தாபனத்தார் மிகவும் அன்புடன் ஒப்புக கொண்டுள்ளார்கள். இத்திருப்பணிக்குச் சுமார் 7 லட்சம் ரூபாய் தேவையென மதிப்பிடப்பட்டுள்ளது.

யாமையுந் துன்பமும் உடைய எல்லாவுயிர்களுக்கும அவ்விரணடையும் நீக்கி, அறிவும் இன்பமும தருதறகு அவர் செயதிருக்கும் ஏற்பாடுகளின் அருமையை எண்ணி பார்க்கப்பாாக்க அனைத்து உயிரிடத்தும் அவர் கொணட அனபும், இரக்கமும் விளங்கும். கணணை விட சிறந்த உறுப்பு நம் உடம்பில் இல்லை. கண்ணை யாராலும் படைத்தல் முடியாது. அக்கண்ணைப் படைத்துக கொடுத்தவன் நமபால கொணட இரக்கததிற்கு எல்லையுமுண்டோ! பெர்க்ஸ்ஸன் (*Bergasan*) என்ற வைத்திய நிபுணர் கணணின் வியப்பான அமைப்பை ஆராய்நதுகாட்டிக் கடவுளின் அறிவாறறலையும் அருளையும் நிலை நாட்டினுர்.

இனி 'கடவுள் ஒருவர் இருந்தால் அவா, தம்மை மக்கள் வணங்கல் வேணமெனக் கருதார்' என்னுங் கருததுப்பட உரைப்பார் உரையும பாழுரையாதல் காட்டுதும்; எல்லாம வல்ல இறைவன் இவ்வுலகததையும இவ்வுலகத்துப் பொருட்களையும் படைதனு, அவற்றின் நடுவே இவ்வியல்பான இவ்வுடம்புகளிற புகுந்து நம்மை வாழச் செய்திருக்கும் வகையினை உற்று நோககும் நுண்ணறிவாளர், இங்ஙனம் அவன் செய்திருப்பது ஒரு சிறந்த நோக்கம் பற்றியே அல்லாமல் வெறும் பாழுக்காக அன்றென உணர்வர்.

நாம் கடவுளின் பேரறிவினையும் பேரின்பத்தினையும் அறிதற்குக் கருவிகளாகவே அறிவையும் இன்பத்தினையுஞ் சிறிது சிறிதே காட்டும் இவ்வுலகத்துப் பொருட்களையும இவ்வுடம்புகளையும் இறைவன் அமைத்தனனே அல்லாமல் இப்பொருளும் உடம்புகளுமே பேரறிவையும் பேரின்பத்தையும அளிக்குமென அமைத்தானலலன். ஆகவே இறைவனை சார்ந்து பேரறிவு, பேரின்பந்தரும் கடவுளின செய்கைகளில் பற்று வைதது, சிறறின்பந்தரும் செயல்களை மறந்து இறைவனின நோக்கத்தோடு ஒத்திருந்தால் அது கணடு அவன் திருவுள்ளம் மகிழ்வன்.

'' மகன் உயர்ந்த நிலையடைதல கண்டு
மகிழா தந்தையாரும்
பாரினில் உளரோ? ''



# திருவேங்கடத்து இரட்டை மணிமாலை

திரு. கோ. பாலசுந்தரனார், எம்.ஏ.,-சேலம்.

### காப்பு—வெண்பா

தேனமரும் சோலைத் திருவேங் கடத்தெந்தை
கானமரும் பூங்கழற்குக் காணிக்கையாய்—நாணியும்
இன்தமிழா லேற்கும் இரட்டைமணி மாலைக்கு
நன்மாறன் நல்லருளை நாடு.

### நூல்—வெண்பா

நீல முகில்வண்ணன் நீணுலகைத் தாயளந்தான்
கோல வராகமாய்க் கொம்பிடை—ஞாலம்
தனையெடுத்தான் தாழருவி தங்குமொலி வேங்கடத்தான்
எனையெடுத்தான் நோய்நீக்கி ஏன்று.

### கட்டளைக் கலித்துறை

என்றும் மதியும் நிகராழி சங்கும் இயைந்தொளிரத்
துன்றும் கவித்த வலக்கையும் கொண்டனன் தூமலராள்
நன்றும் நிறனுறை நாரணன் வேங்கடன் நாள்மலர்த்தாள்
என்றும் தொழுவோர்க் கிடரிலை நாளும் இறைஞ்சுமினே.

### வெண்பா

இறைவன் இவனென் றிறைப்பபோ தெண்ணிக்
குறைவில் மனந்தான் குவியநின்று—அறையின்
மறைமுடிவில் நின்றதிரு வேங்கடவன் காக்கும்
கறையில் வினையகலும் காண்.

### கட்டளைக் கலித்துறை

காண்டற் கரிய திருவேங் கடவன் கருதுருவில்
ஈண்டும் இடக்கீழ்க் கரமது காலின் இடத்தொடையில்
தாண்டும் துயர்க்கடல் வாழ்வின் இடமுழந் தாளளவே
தாண்டு மெனுங்குறிப் பாகும் தொழுமின் தளர்வின்றியே.

### வெண்பா

தளராது வேங்கடவன் தாளின்கீழ்ச் சேர்ந்து
அளவில் சரணம் அடைந்தால்—வளமிக்க
அந்தமில் இன்பத் தழிவில்வீ டுந்தளிக்கும்
நந்தலிலாச் செல்வருளும் நன்கு.

### கட்டளைக் கலித்துறை

நன்கு திருமலை வேங்கடத் தான்தளி நந்தலின்றிப்
பன்னெடு நாள்கள் உயர்ந்திட வேண்டிப் பகர்முறைகள்
மன்னிய ராமா நுசர்தினம் வைகா னசநெறிகள்
துன்னிடப் பூசனை ஓராண்டு செய்தார் தொழுதுய்ம்மினே.

### வெண்பா

மின்னார் முகில்சூழும் வேங்கடம் ஒன்றையுமே
துன்னித் தொழுதார் துயரகலும்—பன்னும்
அனந்தாழ்வான் நந்தவனம் அன்பின் அமைத்தே
இனமலரால் ஏத்தினன் ஈங்கு.

### கட்டளைக் கலித்துறை

ஈசன் திருவேங் கடவன் மலர்த்தாளை எப்போதும்
மாசில் மனத்தால் தொழுதுய்ந்தோர் தொண்டைமான் மன்னவன்
ஏசில் விசய நகர்மன்னர் இன்தொண்டால் ஏற்றமிகும்
ஆசில் கொடையால் பெரிதன்ப மார்ந்தார் அடைந்துய்ம்மினே.

### வெண்பா

ஆர்ந்ததிரு வேங்கடத்தின் ஆன்றபுகழ் நற்றளியில்
சேர்ந்த திருமேனி செப்புங்கால்—பார்போற்றும்
ஐந்துவகைப் பேரங்கள் ஆங்குண்டு போற்றுங்கள்
காந்துமுகில் மேனியனைக் கண்டு.

### கட்டளைக் கலித்துறை

கண்பெற்ற நற்பயன் கார்முகில் வண்ணனைக் காண்பதுவே
எண்ணித் தொழுவோர் இருவினை என்றும் இரிந்தகலும்
திண்ண மிதுமுன்னர் உய்ந்தார் பலரால் திருமலையில்
தெண்ணீர்க் கமல மலரடி எண்ணித் தோய்வதுவே.

### வெண்பா

தேரின் மகிழ்மாறன் செந்திருவின் முன்னிலையில்
சீரின் திருவேங்கடவன் திருவடியில்—நேரில்
சரண் கதிசெய்து சலிப்பிலா ஞானம்
திரமாகக் கொண்டானமுன் தேர்ந்து.

### கட்டளைக் கலித்துறை

தேரின் பெரிய பெருமாள் மணவாளர் சேர்ந்தபெரும்
பேரின் திருவேங் கடத்துறை வார்மன் பிறங்குகொலு
பேரம் சயனத் திருப்பேரம் ஆமைந்தும் பேரருளே
வாரமோ டத்தளி காணின் நுமக்கு வருந்திருவே.

### வெண்பா

வேயுயரும் வேங்கடத்து வித்தகற்குப் பத்திமிக
வாயும் திருமலை நம்பிமுன்—போயுயரும்
தண்துழாய்க் கைங்கரியம் தாவிலாத் தீர்த்தமொடு
கொண்டுய்ந்தார் நீயுமது கோள்.

(28-ம் பக்கம் பார்க்க)

# ★ திருவேங்கடமலை வரலாற்று மாலை ★

ஐந்தாம் ஸ்தபகம்

பூங்கிணறு (பூலபாவி)

இனி, திருவேங்கடமலையில் பெருமாள் திருக்கோவிலில் இருக்கும் பூங்கிணறு முதலியவற்றின் வரலாறு கூறப்படும்.

முன்பு - ஒருகால் அரசர்பெருமானுகிய தொண்டைமான் சக்கரவர்த்தி தினமும் குகை வழியாக வந்து பெருமானைச் சேவித்து உயர்ந்த உலக போகங்களை அனுபவித்துக் கொண்டு தருமமாக ராஜ்யத்தை ஆண்டு வந்தான் - என்று பூகோள உபாக்யானமென்று கூறப்பட்ட வராக புராணமிரண்டாம் பகுதியில் பத்தாம் அத்தியாயத்தில் கூறியபடியே, தொண்டைமான் சக்கரவர்த்தி கலியுகத்தின் தொடக்கத்தில் திருவேங்கடநாதன் திருவடித் தாமரையிணையின்கண் பரிபூரண பக்தி உண்டாகப் பெற்று அப்பெருமானருளினுல் அறநெறியோடு அரசாட்சி செய்துகொண்டும் போகங்கள் அனைத்தையும் அனுபவித்துக் கொண்டும், பகவான் காட்டித்தந்த ஸ்ரீ நரஸிம்ஹ குகையின் வழியாகச் சென்று தினந்தோறும் ஸ்ரீநிவாஸ பகவானைச் சேவித்துக் கொண்டிருந்தான்.

'அப்போது ஒரு நாள் அம்மன்னவன் ஸ்ரீநிவாஸ பகவானுடைய ஸந்நிதியில் இருக்குங்காலத்தில் வலிமை மிக்க பகைவர்கள் அவனது நகரினை முற்றுகையிட்டனர்'-என்று பிரம்ம புராணம் ஏழாமத்தியாயத்தில் கூறியபடிச் சிற்றரசர் கூட்டங்கள் தொண்டை மன்னவனை வெற்றி கொள்வதற்காக அவனது பட்டணத்தைச் சூழ்ந்து கொள்ள, அம்மன்னவன் அவர்களை எதிர்த்துச் சென்று, தமது நாட்டைக் குறித்து ஓடுகின்ற அவர்களைப் பின்னே துரத்திக் கொண்டு ஓடிக் கடும்போர் செய்து வலிமை குன்றப் பெற்று, ஒன்ருகத் திரண்டெழுந்த அவ்வரசர் கூட்டங்கள் அனைத்திலும் தோல்வியடைவிக்கப் பெற்றவனுய் அச்சமுற்றுத் தனது நாட்டிற்குத் திரும்பி ஸ்ரீநரஸிம்ஹ குகையை அணுகி அப்பெருமானை வணங்கித் துதித்து அக்குகையின் வழியே சென்று (திருமலையில்) மனைவிமார்களுடன் கூடி விளையாடி மகிழ்ந்துகொண்டிருக்கும் ஸ்ரீநிவாஸனை அவேளையில் அணுகினன்.

பின்பு, பகவானேடு விளையாடிக் கொண்டிருந்து அகாலத்தில் அந்தப்புரத்திற்கு வந்த புருஷனைக் கண்டு வெட்கப்பட்டு உடனே அவ்விடம் விட்டு ஓடுதலையே குறிக்கோளாகக் கொண்ட மனைவிமார்கள் இருவரில் ஒருத்தியான ஸ்ரீ தேவி ஸ்ரீனிவாஸனுடைய திருமார்பில் ஏறி ஸ்ரீவைஜயந்தியென்னும் வனமாலையில் மறைந்தாள். மற்றொருத்தியான பூதேவியோவெனில், முன்பொரு காலத்தில் ரங்கதாஸனுல் நந்தவனத்திற்காகத் தோண்டப்பெற்று அருகிலிருந்த கிணற்றிலே குதித்து மறைந்தாள் என்று-பண்டிதர் பாமரர் என்னும் வாசியில்லாமல் அனைவருமறிந்த இக்கதையைப் பெரியோர்கள் கூறக் கேட்ட ஸ்ரீராமாநுஜமுனிவர்,

முன்கற்பத்திலும், அகாலத்தில் வந்த தொண்டை மன்னவனுல் வெட்கமடைந்த ஸ்ரீநிவாஸன்தேவிகள் ஓடிப்போனர்களென்ற இச்செய்தி புராணத்தில் தெரிய வருகிறது. ஆனுல், கங்கை நீராடப் புறப்படுகின்ற வீரசர்மா என்ற தென்னுட்டு அந்தணனுடைய சரிதத்தைக் கூறும் சந்தர்ப்பத்தில் இச்செய்தி காணப்படுகிறது. இப்போதோவெனில் அது அத்தொண்டைமன்னவனுக்குப் பகைவரால் நேர்ந்த பரிபவத்தைச் சொல்லும் தருணத்தில்

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான்:
திருப்பதி.

கூறப்படுகின்றது. வராக புராணம் இரண்டாம் பகுதி பத்தாம் அத்தியாயத்தில் வீர சர்மாவென்னும் அந்தணனது சரிதத்தில், (வீரசருமனென்னும் வேதியன் கங்கையாடச் செல்லுமவன், திரும்பி வந்த பிறகு அழைத்துப்போவதாகச் சொல்வித் தன் மனைவி கருவுற்றிருந்தவளைக் காப்பாற்றும்படித் தொண்டை மன்னவனிடம் அடைக்கலமாக்கிச் சென்று கங்கையாடித் திரும்பி வந்து தன் மனைவியின் க்ஷேமத்தைப் பற்றி அரசனிடம் விசாரிக்க, அம்மன்னவன் அவனை இங்கேயே இரு என்று கூறி அந்தப்புரம் சென்று அங்கு அவள் இறந்து கிடப்பதனைக் கண்டு) - அவ்வந்தணனேடு சொல்லாமல் குகையருகில் வந்து ஸ்ரீநரஸிம்ஹனை நமஸ்கரித்துவிட்டு அக்குகை வாயிலாகத்

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

# மாடக் கோயில்

சோழ மன்னர்கள் காலத்தியக் கட்டிடக்கலை அமைப்பில் ஓர் புதுமையான — ஆனால் சிறப்பான — அம்சம் 'மாடக் கோயில்' என்பது! நுழைவாயில் சிறிதாயும், கொஞ்சம் உயரமான கட்டுமானத்திலும் அமைந்திருக்கும். ஸ்வாமி சந்நிதிக்கு நேர் எதிரில் சிறுவாயில்தானிருககும். இந்த மாடக் கோயில்களை அம்பர், ஆக்கூர், நன்னிலம், பெண்ணாகடம், சாயாவனம் (திருச்சாய்க்காடு) ஆகிய திருத்தலங்களில் காணலாம். இனி 'மாடக்கோயில்' ஏன் தோன்றிற்று என்று பார்க்கலாமே!

திருவானைக்கா என்பது ஒரு சிறப்புற்றப் புனித சிவத்தலமாகும். 'ஜம்புகேஸ்வரம்' என்று வழங்கப்படும இத்தலம், பஞ்சபூத க்ஷேத்திரங்களில் (அப்பு, தேயு, வாயு, பிருத்வி, ஆகாசம்) ஒன்றான அப்பு க்ஷேத்திரமாகும்.

இறைவர் ; ஸ்ரீ ஜம்புநாதர் — இறைவி : ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி

திருவானைக்கோவில் நாவல் மரத்தடியில் வீற்றிருந்த சிவலிங்கத்தின் மேல், மரத்திலிருந்து உலர்ந்த சரகுகள் உதிராவண்ணம், ஓர் சிலந்திப்பூச்சியானது மேலே தன் எச்சிலைக் கொணடு வலை பின்னி, பந்தல் போட்டிருந்தது. என்னே ஓர் சிலந்திப் பூச்சியின் பக்தி! அதே சிவலிங்கத்தை ஓர் யானையும் வழிபட்டு வந்தது! குளத்தில் நீராடித் தன் தும்பிக்கை நிறைய நீர் மொணடு வந்து ஈசனார்க்கு அபிஷேகம் செய்து, மனம் குளிர்ந்தது. சிவலிங்கத்தின் மேலே கட்டப்பட்டிருக்கும் சிலந்தி வலை எச்சிலானதால் அனுசிதமென்று எண்ணி அதனைச் சிதைத்து விட்டது. யானை வழிபட்டுப் போனதும் சிலந்தி மீண்டும் வலை பின்னிப் பந்தல் போட்டு வைக்க, அதனை யானை சிதைக்க, இப்படியே நடந்துகொணடிருநதது.

இதனைக் காணச் சகிக்காத சிலந்தியானது ஒருநாள் யானையின் தும்பிக்கையிற் புகுந்து ஆத்திரமடங்கக் கடித்தது. வேதனை தாங்க முடியாத யானையும் தன் தும்பிக்கையை வெகுவேகமாகத் தரையில் ஓங்கியடிக்க, சிலந்திப் பூச்சி மாணடது. யானையும் உயிர் நீத்தது. இவ்வளவும் அவை இரணடுக்குமிருந்து வந்த அளவு கடந்த சிவ பகதியால்தானே! யானை திருக்கயிலையில் கலந்தது. சிலந்தியும் நல்லகதியடைந்து சோழ வம்சத்தில் மன்னராகப் பிறந்தது. சிவனார் அளித்த பரிசன்றோ!

சிலநதி, மறுபிறப்பெடுத்து கோச்செங்கட் சோழர் என்ற சோழ தேச மன்னராயிற்று. சிவனாருககு மீணடும் நற்பணியாற்றும் பேறு வாய்த்திருந்ததால், தன்னுடைய முந்திய பிறவியின் வாசனையால், தான் சிலந்தியாயிருந்து ஈசனைப் பந்தலிட்டு வழிபட்டு வந்த காலை, ஓர் யானையானது தான் பின்னிய வலைப் பந்தலை சிதைத்ததும், அதன்பின் ஒவ்வொனறும் உயிர் துறந்ததும் நினைவுகூர்ந்து, யானை முன்பே விரோதச் செயல் புரிந்து சிவனார் வழிபாட்டில் அபசாரம் புரிந்துள்ளதால், இனி யானையே உள்ளே புக முடியாத வாயிலமைத்துக் கோயில்கள் கட்டினார் என்பது வரலாறு! அத்தகைய கோயில்கள் 'மாடக்கோயில்' 'பெருங்கோயில்'. எனவும் படும். செங்கணார் (கோச்செங்கட்சோழர்) கட்டிய மாடக் கோயில்கள் எழுபத்தெட்டு என்று அப்பர் பெருமான் திருவாக்காகும். திருமங்கை ஆழ்வாரும் 'எண்டோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து உலகாண்ட திருக்குலத்து வளச்சோழன்' என்று பாராட்டிப் பாடியுள்ளார்! சோழன் சிறப்பு சொல்லிலா அடங்கும்?

திருமலைக்குச் சென்று ஸ்ரீதேவி பூதேவிகளுடன் கூடிய ஸ்ரீனிவாஸ பகவானைச் சேவித்தான். திடீரென்று வந்த அவனைக் கண்டு தேவிகள் இருவரும் ஒளிந்து கொணடனர். வந்து வணங்கிய மன்னவனை ஏன் அவேளையில் வந்தாய் என்று பகவான் கேட்க, அரசன் அப்பிரானை வணங்கி அச்சத்துடன் பிராமணப் பெணமணி மாணடதாகக் கூறினான்-என்று கூறப்பட்டுள்ளது ஆக இங்ஙனம் இக்கதை சிறிது வேறு பட்டிருப்பது வெவ்வேறு கற்பங்களில வெவ்வேறு விதமாக நடந்தமைம காரணமாகப் பொருந்தும்.

மேலும் பூதேவியின் தீர்த்தமாகப் புராணத்தினால் அறியப்படுகின்ற இக்கிணற்றில் பூதேவி புகுந்தமையும் பொருத்தமானதுதான். ஆகையால் விளையாட்டுத் தடையாக அரசனது வருகையைக் கண்டு அஞ்சியோடி வந்து இதனிற் புகுந்த இப் பூமிதேவிக்குத் தடையொன்றுமின்றிப் பெருமாளோடு கூடி விளையாட்டு நிகழ்வதற்காக அவனோடு இவளைப் பிரதிஷ்டை செய்வித்தல் தக்கதென்று நினைத்து, அப்பழைய கதையைப் பரிபாலனம செய்வதறகாக அந்த ரங்கதாஸனது கிணற்றில், பூதேவியையும் அத்தீர்த்தத்திற்குத் தலைவனாந் தன்மையையடைந்த பெருமாளையும் அர்ச்சை வடிவமாகத தோற்றுவித்துப் பிரதிஷ்டை செய்வித்து உள்ளே எழுந்தருளுவித்துத் தினந்தோறும் அக் கிணற்றில் அவ்விருவர்க்கும திருவாராதனம் செய்ய வேணடும், ஸ்ரீனிவாஸன் சாத்திக் களைந்த திருத்துழாய் பூமாலை முதலியவைகளையும் பூதேவிக்காக அவ்வாவியில் சேர்க்க வேண்டும் என்று கட்டளையிட்டு அப்படியே நடத்தி வைத்தருளினர். அவ்வாவி பெருமாளுடைய பூமாலைகள் சேரப் பெறுவதனால் பூங்கிணறு (பூலபாவி) என்ற பெயரால் இன்று பிரசித்தமாக உள்ளது.

பொற்கிணறு (பங்காரு பாவி) :

இவ்விதமாகவே, ஞ்ஞான பக்தி வைராக்யங்கள் நிறைநத யாமுன முனிவர் (ஆளவந்தார்) முன்பொரு கால திருவேஙகடமலைக்கு எழுந் தருளித் திருவேங்கடமுடையானுக்கு மங்களாசாஸனம் செய்துகொண் டிருக்கையில், ஒரு நாள காலையில் போகஸ்ரீநிவாஸப் பெருமாளுடைய திருமஞ்சனத்திற்காக ஸ்ரீபாபவிநா சனமென்னும் உயர்ந்த தீர்த்தத்தி லிருந்து மிகப் பரிசுத்தமானதும் மிக்க ஆரோக்கியத்தைத் தருவதும் வயிரமணியின ஒளித்தொகுதி போன்று மிகத் தெளிந்ததுமான நன் னீரைக் கொண்டு வரத் திருமலை நம்பிக்கு மழைத் தொந்தரவினுல் இயலாமற்போக, வேறு தீர்த்தஙகள் பெருமாள்திருமேனிக்கு ஆரோக் கியந் தராமையை நன்கு ஆலோசித்த ஆளவந்தார் பூஜிக்கத்தக்க ஸ்ரீதேவி யைச் சரணமடைந்து, கருணை முத லிய நற்குணங்கள நிறைந்த ஸ்ரீதேவீ, உன்னுடைய தீர்த்தமாகிய இக் கிணறறின்நீர் திருவேங்கடவன் திரு மேனிக்கு ஆரோக்கியமளிப்பதாக வும், இனிப் பாபவிநாசன தீர்த்தம் போல இதுவும அப்பெருமானுடைய திருமஞ்சனத்திற்குத் தக்கதாகவும் இருக்குமாறு நீ அருள புரிய வேணடு மென்று பிரார்த்தித்துவிட்டு, ஸ்ரீ தேவியின் தீர்த்தமென்று புராணத் திஞல் அறியப்பட்டதும் முன்பு ரங்க தாஸஞல் தோணடப்பட்டதும் (பிர சாத) திருமடைப் பள்ளியின் அருகி லுள்ளதும பொற்கிணறென்று அழைக்கப்படுவதுமான சிறநத கிணற்றிலிருந்து தாமே தீர்த்தத்தை எடுத்து வநது பெருமாள்திருமஞ் சனத்தை நடத்தி வைதது, இனி மேல் அழகனும் எம்பிரானுமாகிய இநத ஸ்ரீனிவாஸ பகவானுக்கே உரிய தாய்க் கொணடு இக்கிணறு அழகப் பிராஞர் கிணறென்று அவனது பெய ரால் அழைக்கப்பட வேணடும், இதன் தீர்த்தத்திஞலேயே பெருமாளுடைய எல்லாக் கைங்கர்யங்களும் நடத்தப் பட வேண்டும், ஸ்ரீ பாப விநாசனம் முதலியவற்றிலிருந்து தீர்த்தம் வரா மற்போஞலும் திருமஞ்சனம் திரு வாராதனம் முதலியவற்றிற்குத் தாமதம் செய்யக் கூடாது என்று கட்டளை செய்தருளிஞர் என்று பெரி யோர் கூறிய கதையைக் கேட்டரு ளிய ஸ்ரீராமானுஜ முனிவர் தமது பரமாசார்யருடைய கட்டளையைத் தாம தலையிஞலேற்று, தம்மைச் சேர்ந்த அனைவர்க்கும் ஆளவந்தாரு டைய உத்தரவை அப்படியே நிறை வேற்றுமாறு கட்டளை செய்து, ஸ்ரீ பாப விநாசன தீர்த்தம் அதற்குப் பிரதிநிதியாகத் (=ஈடாக, பதி லாகத்) திருமலை நம்பிக்குப் பகவானு லேயே நியமிக்கப்பட்ட ஆகாச கங்கா தீர்த்தம பரமா சார்யரான ஆளவந்தாரால் நியமிக்கப்பட்ட அழகப்பிராஞர் கிணற்றின் தீர்த்தம் ஆகிய இம்மூன்றினுள் ஒரு தீர்த்தத் திஞலேயே ஸ்ரீனிவாஸ பகவானுக்குக் கைங்கரியம் அனைத்தும நிறைவேற்றி யருளிஞர்.

பெருமாள் திருக்கோவிலுக்குள் பிரசாதத் திருமடைப் பள்ளிக்கு அருகிலுள்ளதும் முன்பு ஸ்ரீதேவி யால் பெருமாள் தளிகைக்கு உதவும் படி நிருமிக்கப்பட்டதும் இப்போது அழகப் பிராஞர்கிணறென்னும் பெய ரால் வழங்கப்படுவதும் பொற்கிண றென்ற மறுபெயரைக் கொணடது மானதோர் கிணறும், செணபகத் திருச்சுற்றில் (பிரதக்ஷிணத்தில்) வட கிழக்குத் திசைப் பகுதியில புஷ்ப மண்டபத்தினருகில் திருப்பணியார மடைப்பள்ளியின் பக்கத்தில் முன்பு பெருமாள் தளிகைக்காகப் பூதேவி யால் நிருமிக்கப்பட்டதும் இப்போது பூங்கிணறென்னும் பெயர் பெற்றது மானதோர் கிணறும் ஆகிய ஸ்ரீதேவி பூதேவிகளின் தீர்த்தங்களான இவ் விரணடும் முன்பு ஒருகால் தூர்ந்து போய்த் தென்படாமலிருந்து பின்பு ரங்க தாஸஞல பூந்தோட்டத்தைக் காப்பதற்காகக் கிணறுகளாகத் தோண்டி உண்டாக்கப் பெற்று, அதற்குப் பிறகு தொண்டைமான் சக்கரவர்த்தியாகத் தோன்றிய அந்த ரங்க தாஸஞலேயே நன்ருகக் (கல் முதலியவற்ருல் உள்ளும் புறமும்) கட்டப்பட்ட உறுப்புக்களையுடையன வாக விளங்குகின்றன.

வராஹ புராணம் இரண்டாம் பகுதி ஒன்பதாமத்தியாயத்தில்—இங் ஙனம் ரங்கதாஸன் ஸ்ரீனிவாஸனைச் சேவித்து வியப்படைந்து. இப்பெரு மானுக்குப் பூந்தோட்டம் சமைப் போமென்று நினைத்தான் என்பது தொடங்கி, மல்லிகை அலரி தாமரை முல்லை மநதாரம்குடமல்லிகை துளசி செண்பகங்களின் வனத்தையுமே உண் டாக்கிஞன். அங்கு இரண்டு கிணறு களைத் தோண்டி அவற்றின் நீரால் தோட்டத்தை வளர்த்து அதிலிருந்து மலர்களைப் பறித்துப் பின்பு தானே அவற்றை மாலையாகத் தொடுத்தான் என்பதிறுதியாக, ஸ்வாமிபுஷ்கரிணிக் கரையில் இப்போது பெருமாள் திருககோவிலுள்ள இடத்தில் பூந் தோட்டம் சமைத்து ரங்கதாஸஞல் இரு கிணறுகள் ஏற்படுத்தப்பட்டன என்று சொல்லப்பட்டது.

பவிஷ்யோத்தர புராணத்திலும் பதின்மூன்ருமத்தியாயத்தில்—தொண் டைமானரசே, திருமடைப்பள்ளி களின் முற்பகுதியில் முற் பிறவியில் (ரங்க தாஸஞகப் பிறந்திருந்த) உன் ஞல் நிருமிக்கப்பட்ட ஸ்ரீதேவி தீர்த் ததனதயும் பூதேவி தீர்த்தத்தையும் இப்போது கருங்கற்கட்டடமாகக் கட்டிச் செப்புத்தகட்டிஞல் கவச மிட்டுப பொற்பூச்சிஞல் அலங் கரித்துச் சோபையுடையனவாகச் செய்யக் கடவாய் என்றும், முற் பிறவியில் பூநதோட்டத்திற்கு உத வும்படி இக்கிணறுகள் இரணடும உன்ஞல் தோணடப் பெற்றன என் றிவ்வாறு ஊழ்வினையிஞலுண்டாகிய உன் முற்பிறவி என்ஞல் கூறப்பட்ட தென்று கோவிந்தன் கூறிய வசனம் கேட்ட அரசர் பெருமாஞகிய தொணடை மன்னவன் முன் ஜன்மத் தில் தான் தோண்டிய கிணறுகளிரண்

டையும் (முற்கூறியவாறு) செப்பனிட்டான் என்றும் சொல்லப்பட்டது.

பிரம்ம புராணம் ஏழாமத்தியாயத்தில்—புளிய மரத்தினடியில் இருக்கும் புற்றினுள்ளே முழந்தாளளவாகப் புதைந்துள்ளதோர் அழகிய விஷ்ணுவின் அர்ச்சை வடிவம் உள்ளதன்றோ. அதற்கு இரணடுவிற்கிடைத் தூரத்தில் முன்பு பூதேவியினால் தேவதேவனது தளிகைக்காக நிருமிக்கப்பட்ட பூமி தீர்த்தமென்றொரு அழகிய புண்ணிய தீர்த்தம் உள்ளது. அப்புளிய மரத்தின் வடமேற்குத் திசையில் பூமி தீர்த்தத்தில் வசித்து வரும் மிகச் சிறந்த இளங்கன்றுடையதோர் பசு தனது பாலினால் புற்றிலுள்ள பகவானைத் திருமஞ்சனம் செய்து கொண்டு வருகிறது என்றும், பூமி தீர்த்தத்திற்கும் ஸ்வாமிபுஷ்கரிணிக்கும் இடையில் நான்காம் வருணத்தில் உதித்த அந்தப் பாகவதோத்தமன் (ரங்கதாஸன்) ஹரியின் விஹாரத்திற்கிடமாகியபூந்தோட்டத்தைச் சமைத்தான்-என்றும் கூறப்பட்டுள்ளது.

**உறங்காப் புளி-செண்பக மரங்கள் :**

இனி உறங்காப் புளியமரம் செண்பக மரம் இவற்றின் சரிதம் கூறப்பெறும். வராஹ புராணம் இரணடாம் பகுதி ஒன்பதாமத்தியாயத்தில்-காட்டினிடையில் ஸ்வாமி புஷ்கரிணியின் கரையில் (புளிய) மரத்தினடியில் வானையளாவி நிற்பவரும் தாமரை போன்ற கண்களையுடையவரும் பொன்னிறங் கலந்து கறுத்த வடிவமுடையவருமான அழகிய ஹரியை ரங்கதாஸன் கண்டான், என்ற வசனத்தினாலும்,

வேடர்தலைவன் தொண்டைமான் சக்கரவர்த்தியுடன் ஸ்வாமி புஷ்கரிணியில் விதிப்படி நீராடி, அதன் கரையில் புளிய மரத்தின்கீழே இருக்கும் தேவர் தலைவனான ஸ்ரீநிவாஸனை மஹாத்மாவான அம்மன்னனுக்குக் காட்டினான்-என்றுள்ள வசனத்தினாலும்,

பாத்ம புராணம் ஏழாமத்தியாயத்தில்-பூந்தோட்டம் நிருமிக்கும் நான்காம் வருணத்தவனான ரங்கதாஸனும் பூஜை செய்யும் அந்தணர் தலைவனான கோபீநாதனுமாகிய இருவரும் ஒன்று சேர்ந்து வேங்கடமலையில் புகுந்து மெல்ல மெல்லப் புனிதமான ஸ்வாமி புஷ்கரிணியை அணுகி அதில் விதிப்படி நீராடிப் பெருமாள் எங்குள்ளாரென்று தேடினர். அங்ஙனம் தேடிக்கொண்டே சென்றுகொண்டிருந்த அவர்களுக்கு அதன் கரையில் புளிய மரத்தடியில் ஜனார்த்தனன் தோற்றமளித்தான். புளிய மரத்தினடியில் உள்ள புற்றில் எழுந்தருளியிருக்கிற பரமபொருளான ஹரியை அதிலிருந்து வெளியே எடுத்து அவ்விருவரும் அதன் மேற்குப் பகுதியில் நிறுத்தி வைத்தனர் என்ற வசனத்தினாலும்,

பவிஷ்யோத்தர புராணம் மூன்றுமத்தியாயத்தில்—லோக நாதனான ஹரிபகவான் தான் ஒளிந்திருக்கத் தக்க இடம் ஒன்றினை ஆராய்ந்து கொண்டிருக்கையில ஸ்வாமி புஷ கரிணியின் தெற்குக் கரையில் புளிய மரத்தடியில் அபாய மற்றதோர் சிறந்த புற்றினை மகிழ்ச்சியோடு பார்த்தார். அதனைத் தான் வசிக்கத் தகுந்ததோர் சிறந்த இடமாகக் கருதி அதனுள்ளே மறைந்திருந்தார்-என்றுள்ள வசனத்தினாலும், கூறப்பட்டபடி புளிய மரத்தின் கீழே ஸ்ரீநிவாஸ பகவான் தோன்றி விளங்கிக் கொண்டிருக்கும்போது, ரங்கதாஸனென்னும் பகவத் பக்தனொருத்தன்-தென்னாட்டிலிருந்து வந்து வைகானஸர் தலைவனாய்க் கோபீநாதனென்னும் பெயர் கொண்ட அர்ச்சகன் ஒருவன் வழியில் சந்தித்துத் தான கனுக்கண்ட கதையைச் சொல்லக் கேட்டு அவனுடன் திருவேங்கடமலைக்கு வந்து ஸ்வாமி புஷ்கரிணியின் தென் கரையில் புளிய மரத்தின் கீழே எழுந்தருளியுள்ள பகவானைச் சேவித்துவிட்டு, இப்பெருமானுககு ஒரு கோவில் நிருமிக்க வேணடும் ஒரு நந்தனவனமும் உண்டாக்க

(36-ம் பக்கம் பார்க்க)




# பரமஹம்ஸரும் பக்தியும்

பக்தியின் மூலம பரமனடி அடையலாம், இடையறாத பக்தியினால் இறைவனை இப்பிறவிலேயே நேரடியாகக் காணலாம என புராணங்கள் கூறுவதையும, அருணகிரிநாதர், ஆழ்வார்கள, நாயனமார்கள் ஆகியோர் வரலாறு கூறுவதையும்உண்மையென உலகுக்கு உணர்த்தியவர் பரமஹமஸர். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்

"கடவுளை அடைவதே வாழ்க்கையின் முதலாவதான குறிக்கோள்; அப்படிக் கடவுளை அடைவதற்கு பக்தி, கர்ம, ராஜ, ஞான யோகங்களுள் பக்தி மார்க்கமே எல்லாவற்றிலும் மிகச் சுலபமாகிறது'' என அருள் வாக்கு புரிகிறார் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

ஆன்மிகம் என்ற மிகப் பெரிய தத்துவத்திற்கு விளக்கமாக அவதரித்தார். அவருடைய உபதேசங்கள் எளிய உதாரணங்களுடன் ஆழமான அரிய கருத்துக்களையும் மிக அழகாக உலக மக்கள் உணர்ந்து உய்யுமபொருட்டு அமைந்துள்ளன. கடவுள் பக்தி எவ்வாறு இருக்கவேண்டும் என்று பக்தியின் இலக்கணத்தை பல சமயங்களில் மிக எளிமையான முறையில் எடுத்துரைக்கிறார்.

டாக்டர். ஜி. கார்த்திகேயன்,
ராணிப்பேட்டை.

உலக வாழ்க்கையில் புகுமுன் நாம் மனதை இறைபக்தியில் செலுத்த வேண்டும். அப்போதுதான் சம்சார சாகரத்தில் முழுதும் முழுகாது வாழ்க்கைக்கடமைகளை செய்து கொண்டே இறைபக்தியிலும், இறைபணிகளிலும் எண்ணங்களைஈடுபடுத்தி முக்தியடையும் முயற்சியில் வெற்றி பெற முடியும். பலாப்பழத்தை அரிவதற்கு முன்பு கையில் எண்ணெய் தடவிக்கொள்ளவேண்டும். இல்லாவிடில் கையில் பலாப்பிசின் ஒட்டிக் கொள்ளும். உலக வாழ்க்கையில் புகுதற்கு முன்பு மனதை கடவுள் பக்தியில் ஊறியிருக்கும்படி செய்ய வேண்டும். இல்லாவிடில் உலகப் பற்று என்னும் பிசின் அதைத் துன்புறுத்தும். மனது என்னும் பால் உலகம் என்னும் நீரில் கலந்து போகக் கூடியது ஆனால் மனதை ஏகாந்தத்தில் நிலைநிறுத்தி இறைபக்தி என்னும் வெண்ணெயைக்கடைந்தெடுக்க வேண்டும். பிறகு அதை உலகவாழ்வு எனனும் தண்ணீரில் வைத்தால் கலக்காது மிதந்து கொண்டிருக்கும். முதலில் பக்தியை வளர்ப்பவனுக்கு உலக வாழ்வில் பற்று உண்டாகாது. இரண்டு காந்தக்கற்களுள் வலிவு மிகப்படைத்தது இரும்புத் துண்டைத் தன்பால் கவர்ந்திழுக்கிறது. வலிவில் குறைந்தது அங்ஙனம் கவர்ந்திழுக்க இயலாததாகிறது. உலகப்பற்று, தெய்வப்பற்று என்னும் இரண்டு காந்தங்களுள் தெய்வப்பற்று ஒருவனுக்கு அதிகமாய் விடுமாகில் உலகப்பற்று என்னும் ஆபத்திலிருநது அவன தப்பித்துக் கொளகிறான புலி ஏனைய மிருகங்களையும கொன்று தின்கிறது. அதே விதத்தில் பக்தி எனனும் புலி காமக் குரோதங்கள் என்னும் கீழான மனோ விகாரங்களை எல்லாம் அழித்து விடுகிறது.

விளம்பரத்திற்காகவும், வயிற்றுப் பசிககாகவும் பலர் பக்தியை வளர்த்

துக் கொள்ளும் இந்நாளில், 'பரிசு சீட்டில் முதல் பரிசு விழுந்தால் பரிசுத் தொகையில் பத்து சதவிகிதம் உண்டியில் செலுத்துகிறேன்' என பரமனிடம் வியாபார அளவில் பலர் பக்தியை வளர்த்துக் கொள்ளும் இந்நாளில, இறைவனிடம் நம் பக்தி எவ்வாறு இருக்கவேண்டும் என்று அருமையாக போதிக்கிறார் ஸ்ரீராமகிருஷ்ணர்.

'உள்ளன்போடு கடவுளைக் குறித்துக் கசிந்துருகிக கண்ணீர் சிந்து. பொருளுக்கும், போகத்துககும், பதவிக்கும் மக்கள் குடம் குடமாகக் கண்ணீர் சிந்துகின்றனர். கடவுளுக்காகவென்று யார் கணணீர் சிந்துகிறார்? கடவுளை நாடி அருள் தாகமெடுத்துக் கசிந்து அழுகிறவர்களுக்கு கடவுள் தம்மைக் காட்டியருளுகிறார்'' என்கிறார் பரமஹம்ஸர்.

பக்தன் இறைவனுடன் ஈடுகொள்ளும் இணக்கம் பலதரப்பட்டது. அவை சாந்தம், தாஸ்யம, சக்யம், வாத்சல்யம, மதுரம ஆகியவையாகும். அவைகளுள் ஏதேனும் ஒன்றை தனக்குரியதாக பக்தன் வைத்துக் கொள்ள வேண்டும்.

சாந்த பாவனை. கடவுளே மெய்ப்பொருள் எனறு அவரிடம் ஆழ்ந்த இணக்கம வைப்பது சாந்த பாவனை. பழங்காலத்து ரிஷிகள் இம்முறையைக் கையாணடனர்.

தாஸ்ய பாவனை: ஆண்டான் அடிமை இணக்கம் என்பது இதுவே. ஸ்ரீராமனிடத்து அனுமன் இத்தகைய இணக்கம் கொணடிருந்தார்.

சக்ய பாவனை: சக்யம் என்பது தோழமை. குலேசர் போன்ற கிருஷ்ணனுடைய தோழர்கள் தாங்கள் அருந்தி எச்சில் பட்டதையும தயக்கமின்றி கிருஷ்ணனுக்கு அளித்தனர்.

வாத்சல்ய பாவனை: இது தாய் சேயிடம் கொணடுள்ள இணக்கம். யசோதை கிருஷ்ணனை பரமாத்மனாகக் கருதவில்லை; தன் குழந்தை என்றே கருதினாள்.



கொடும்பு ஸ்ரீ கல்யாண சுப்ரமண்ய சுவாமி கோயில்-தேர்த்திருவிழா.
படம்: எஸ். ஜி. சேஷகிரி-கோவை.

மதுர பாவனை: இது நாயகன் நாயகி இணக்கம். ராதை கிருஷ்ணனிடம இத்தகைய இணக்கம் கொணடிருந்தாள்.

சாதாரண பக்தியின் மூலமாக ஒருவன் பகவானை அடைய முடியாது. பிரேமை பக்தி ஒன்றே பகவானை அடையவதற்கு உற்றவழி. ஆழ்ந்த அருள் தாகமின்றி இறைவனை அடையமுடியாது. கண்ணன் பிருந்தாவனத்தினின்று மதுரைக்குப்போய் விட்ட பொழுது கோபாலர்களும், கோபியர்களும் கண்ணனைக் காண மாட்டாது பைத்தியம் பிடித்தவர்கள் போன்று கதறியழுதனர். இங்குமங்கும் அவனைத்தேடி அலைநதனர். இத்தகைய பிரேமை பக்தி வாய்க்கப் பெறுகிறவர்கள பாக்கியவான்கள. குழந்தை ஒன்று, தன் தாயிடம் காட்டுகிற அன்பையும், கற்புடைய மாது தன் கணவனிடம் காட்டுகின்ற அன்பையும், கஞ்சன் ஒருவன் தன் பொருளிடத்து வைக்கிற பற்றுதலையும் ஒனறு சேர்த்து பக்தன் ஒருவன் பகவானிடத்தில் செலுத்தினால் பரமனடி அடைவது மிக எளிது.

அல்லும் பகலும் பகவானையே சிந்தித்துக் கொண்டிருப்பவன் அவ

ரையே எங்கும் காண்கிறான். தீபத்தின் ஒளிப்பிழம்பை உற்றுப் பார்த்தான பிறகு எங்குத்திரும்பிப் பார்த்தாலும் அவ் ஒளிப்பிழம்பே தென்படும். பக்தியின் வேகம் அத்தகையது.

மக்கள் மது அருந்தி போதை பெறுகின்றனர் ஆனால் பக்திக்கு நிகரான மது இல்லை. அதில் வருகிற போதை பரபோததைதக் கிளப்புகிறது. மதுவின் போதை அதிகரித்திருப்பவன் நான்தான் தெய்வம் என்கிறான். பக்திப் போதையில் மிருசிப் போன கோபியர் தங்களையே கிருஷ்ணனாகக் கருதிக்கொண்டனர். கடவுள் பக்தி ஓங்குமிடத்துப் பக்தன் தன்னையே பகவானாக உணர்கிறான்.

பக்தியை வளர்க்க முக்கிய வழி இறைவனுடைய திருநாமத்தை ஓயாது உச்சரிப்பதுதான். விதையும் அதிலிருந்து வருகிற முளையும் மெல்லியவை. ஆனால் கடினமான பூமியைத் துளைத்துக் கொண்டு போகிற ஆற்றல் அந்த முளைக்கு உண்டு. அங்ஙனம் இறைவனது திருநாமம் என்னும் விதை ஆற்றல் மிகப் படைத்தது. கல்நெஞ்சத்தையும் அது உடைத்து பண்படுத்துகிறது. பழைய பாத்திரத்தைத் தினந்தோறும் துலக்கவேண்டும்; இல்லையெனின் அது துருப்பிடித்துவிடும். இறைவனுடைய திருநாமததை ஓதுவதையும் அவரைப் புகழ்ந்து போற்றுவதையும் நாளதோறும் செய்யவேண்டும். இல்லாவிடில் மனது துருப்பிடித்துப் போகிறது. துருப்பிடிக்காத மனதில் அவ்விறைவன் குடிகொள்கிறான்.

பகவானைப் பிரிந்து பக்தன் உயிர் வாழ முடியாது. அதே விதத்தில் பகவானும் பக்தனைப் பிரிந்திருக்க முடியாது. பக்தனை பகவான் நாடும் போது பக்தன் மதுரம் நிறைந்தவனாகிறான். அந்த மதுரத்தை அருந்தும் தேனீயின் நிலையில் பகவான் இருக்கிறார். குழந்தை ஒன்று, பொம்மைகளை வைத்து விளையாடிக் கொண்டிருக்கும் போது அதற்குத் தன் தாயைப்பற்றியோ உணவைப் பற்றியோ கவலையில்லை. ஆனால் தாயிடம் போகவேண்டும் என்னும் எண்ணம் வந்ததும் பொம்மையை அது பொருட்படுத்துவதில்லை. உலக மக்கள் சிற்றின்பங்கள் என்னும் பொம்மைகளைவைதது விளையாடுகிறார்கள். இறைவனை அடைய வேண்டும் என்னும் அவா அவர்களுக்கில்லை. பின்பு அந்த அருள் தாகம் அவர்களுக்குத் தீவிரமாக வந்து வாய்த்தால் உலக சிற்றின்பங்களைப் பொருட்படுத்தமாட்டார்கள். இறைவனையே நாடுவர்.

குழந்தைக்கு விளையாடுவதற்குப் பொம்மைகளைக் கொடுத்துவிட்டு தாய் வீட்டுக் காரியங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். விளையாடிச் சலித்துபோன பிறகு குழந்தை அரை மனதோடு தாயைக் கூப்பிடுகிறது. ஆனால் தாயோ 'இதோ இப்படி விளையாடு; அப்படி விளையாடு; இதோ வந்து விடுகிறேன்' என்று காலத்தைப் போக்குகிறாள். ஆனால் குழந்தை பொம்மைகளை வீசி எறிந்து விட்டு 'கோ' வென்று கதறி அழுதால் தாய் தன் எல்லாவேலைகளையும் அப்படியே போட்டு விட்டுக் குழந்தையிடம் ஓடி வருகிறாள். அதே விதத்தில் ஜகன்மாதா மக்களுக்கு உலக வாழ்வு என்னும் பொம்மைகளைக் கொடுத்து வைத்திருக்கிறாள். வாழ்வில் விரக்தியடைந்து அன்னையிடம் கோ' வென்று கதறிழுகிற வர்களுக்கு அனுக்கிரகம் செய்ய அவள் விரைந்து ஓடி வருகிறாள்.

'எத்தகைய அருள்தாகம் மனிதனைக் கடவுள் காட்சிக்கு அருகதையுடையவனாகச் செய்கிறது?' என்று சிஷ்யன் ஒருவன் தன் குருவிடம் கேட்டான். 'அதைக் காட்டுகிறேன் 'வா', என்று அவர் அவனை ஒரு தடாகத்திற்கு அழைத்துச் சென்று சிறிது நேரம் தண்ணீருக்குள் அமிழ்த்திப் பிடித்துக்கொண்டார். அவர் பிடியை விட்டதும் சிஷ்யன் திணறிக்கொண்டு தண்ணீருக்கு மேலே வநதான். 'நீருக்குள் எப்படியிருந்தது?' என்று குரு கேட்டார். 'மூச்சுக்காக நான் பட்ட பாட்டை என்னவென்று சொல்வேன்' என்றான் சிஷ்யன். 'அத்தகைய நாட்டம் கடவுள் பொருட்டு வருமாகில் அவரை அடையலாம்' என்றார் குரு.

மனிதன் எநத மதத்தைக் கடைபிடிக்கிறான் என்பது முக்கியமான தலல. ஒருவன் வைணவனாகவோ சைவனாகவோ, சாக்தனாகவோ, வேதாநதியாகவோ, கிறித்துவனாகவோ, முகமதியனாகவோ தன் விருப்பப்படி இருககலாம். ஆனால் உண்மையான பகதியும் சிரத்தையும் அவனிடத்திலிருக்குமானால் எம்மதத்தின் மூலமாகவும் அவன் இறைவனை அடையமுடியும்.



## விண்ணப்பம்

ஸப்தகிரிக்குக் கதை கட்டுரைகளை அனுப்பும ஆசிரியாகள் அவற்றின் பின் தங்கள் முழு முகவரியினை ஆங்கிலத்தில எழுதவும. பிரசுரிக்கப்படும் துணுக்குகளுக்குச் சன்மானத தொகை வழங்கப்படமாட்டா. சம்பந்தப்பட்டவர்களுக்கு ஒரு இதழ் மட்டுமே அனுப்பப்படும்: இந்து சமய விழாக்கள் பற்றிய கதை கட்டுரைகளை இரணடு மூன்று மாதஙகளுக்கு முன்பாகவே அனுப்பினால், தகுந்த தேர்வுக்குப் பின்னர் அவை அவ்வவ் மாதங்களில் பிரசுரிக்க உதவியாக அமையும்.

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

**வேதாங்கங்களின் சிறப்பு என்ன?**

சம்ஸ்கிருதத்தில் வித்யா ஸ்தானங்கள் 14 என்பர்: இவை வேதம்வகுத்த வழியில் தன் பணியாற்றுபவை. வேதங்கள் 4 அங்கங்கள 6. அத்துடன் மீமாம்ஸை, ந்யாயம்–புராணம்–தர்ம சாஸ்திரங்கள். ஆகப்பதினான்காகும். இவைகளில – சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம, கல்பம் என்பன 6-ம வேதாங்கங்கள். இவைகளை முறையே ஆங்கிலத்தில் Phonetics, grammar, Etymology, Ceremonial, Metrics, Astronomy எனபார்கள் எங்கும் நீககமற நின்றநதிருக்கும் பகவானை உருவப்படுத்தி, பரம புருஷன் புருஷோத்தமன் என்று பகவானை அழைப்பது போல் வேதத்தையும் ஒரு மனிதனாக உருவப்படுத்தி அழைப்பதுண்டு. அவனை வேத புருஷன் த்ரயீமாதா என்றெல்லாம் அழைக்கிறோம். இநத வேதபுருஷனுக்குச் சநதஸ் — கால், கல்பம்–கைகள், ஜோதிஷம்—கண், நிருக்தம்—காது, சிக்ஷை—மூககு, வ்யாகரணம் — வாயாகும் — வரிசையாக இவைகளுக்கு சிறு விளக்கம் காணலாம்.

(அ) சிக்ஷை : இது வேதத்தின் எழுத்துக்களின் அளவையைத் தீர்மானிக்கும். சிக்ஷை என்றால் ஒருவரை ஒழுங்குபடுத்துவது எனபபொருள். சிக்ஷிக்கப்படவேண்டியவனே சிஷ்யனாகிறான். இந்த சிக்ஷைகளில் பிரதான சிக்ஷைகள் 9 எனவும் உபசிக்ஷைகள் 9 எனவும் உண்டு. ஆக சிக்ஷைகள் 18 வகைகள் கொண்டன. 1. வியாஸ சிக்ஷை. 2. லக்ஷ்மீசிக்ஷை, 3. பாரத்வாஜ சிக்ஷை, 4. ஆரணயசிக்ஷை, 5. சம்பு சிக்ஷை, 6. ஆபிசலிசிக்ஷை, 7. பாணினி சிக்ஷை, 8. கௌஹலீயசிக்ஷை, 9. வாஸிஷ்டசிக்ஷை என்பன முக்கியமானவை. உபசிக்ஷைகள யாகஞவல்க்ய சிக்ஷை தொடங்கி வ்யாளி சிக்ஷை வரை 9 ஆகும். இந்தப் பகுதி வேத சப்தங்களை எப்படிச் சொல்வது என்ற முறைகளைக் கூறும. எழுத்துக்கள் உண்டாகும் மனிதனது உடலுறுப்புகளைக் கூறி அவைகளின் கால அளவையும வகுககும். வேதமந்திரங்களில் உயர்த்தியும் தாழ்த்தியும் ஓதவேணடிய, உதாததம், அனுதாத்தம், ஸ்வரிதம, ப்ரசயம என்பவைகளைப் பற்றி விளக்க விபரமும் தரக்கூடியது. இத்துடன் கஞத்யயனத்தையும், வர்ணக்ரமங்களையும் ஏற்படுத்திக் கணககிடும். வேதத்தில எழுத்து உசசரிப்புப் பிழைகள், ஸ்வரப்பிழைகள் சிறிதும ஏற்படக் கூடாது. ஏற்பட்டால் உயிருக்கு ஆபததும், வீட்டிற்குத் தீங்கும் ஏற்படலாம். அதனால்தான் மாணவன் 12 ஆணடுகள் சிறு வயதில், குருகுலவாசம் செய்து குருவின வாய் வழியாக வேதம் பயல வேண்டும் என்பர். புத்தகம் கொண்டோ அல்லது தற்செயலாய் காதில்பட்டோ வேதம் ஓதினால் நிச்சயம் ஸ்வரப் பிழை ஏற்படும். அதனால் இந்தப்பகுதி வேதத்தையும் ஓதுபவனையும் கெடாமல் காக்குகிறது என் அறியலாம. உச்சரிப்பு சுவரப்பிசகு ஏற்படாமலிருக்க முற்காலத்தில் மாணவன் தலையில் எலுமிச்சம் பழம் வைத்து வேதம் பயிலுவிப்பார்களாம்.

(ஆ) வியாகரணம் : தன் மனிதன் உடம்பில் ஊனம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது போல் சொற்களிலும் பிழை ஏற்படாமல் காக்க வேண்டும். சொற்கள் வைதிகம்–உலகியல் என இரு வகைப்படும். வியாகரணம் என்றால் இலக்கணம் எனலாம். அவ்இலக்கணம் சொல் இலக்கணம், பொருள் இலக்கணம் என இருவகையாகும். வியாகரணமானது "ப்ரக்ரியை" என்ற வழிமுறையிலும் பகுதி-விகுதி என்ற முறையிலும் சம்ஸ்கிருதச்சொற்களில் ப்ரக்ருதி-ப்ரத்யம-உபஸர்க்கம்-சுபந்தம் திஙந்தம் என்பன போன்ற பகுதிகளைத் திருத்திச் சுத்தப்படுத்தும். இநத வியாகரணம் 8 எனவும், 9 எனவும் கூறுவதுணடு. எட்டு என்ற கொள்கையில் இந்த்ர; சநதர. காசகருத்ஸ்னபிசலீ சாகடாயன. | பாணிணயமர ஜைகேந்ரா ஜரந்த்யஷ்டாதி சாப்திகா‖ எனபன பிரமாணமாகும். ஆனால் இவைகளில பாணினி மகரிஷியால் இயற்றப்பட்ட அஷ்டாத்யாயீயின் அடிப்படையில் வளர்ந்த வியாகரணமே புகழ் பெற்றது. பாணினீயம் மட்டும வைதிக—லௌகிகமான இருவகைச் சப்தஙகளுக்கும இலககணம கூறும. இநதப்பாணினி சூத்ரததிற்கு வரருசி என்பவர் வார்த்திகம் என்ற நூலையும பதஞஜலி என்பவர் மகா பாஷ்யம் எனற பாஷ்யததையும் எழுதினர். வியாகரணத்தின் பிரயோஜனததைப்பற்றிக கூறுகையில ரக்ஷை, ஊகம், ஆகமம, லகு, சந்தேகமின்மை எனற 5 பயன்கள் உண்டு என்றார். தேவர்கள் இந்திரனிடம் சப்த சாஸ்திரமாக ஒரு வியாகரணம் எழுத வேண்டினார்கள். அதன் பின் இந்திரன் ஒரு வியாகரணம் எழுதினன். அதுவே ஐந்த்ரம் என்ற பெயரில வியாகரணங்களில் முதலாவதாக இருக்கிறது. ஒரு பணபட்ட மொழிக்கு இலககணம் என்பது

(30-ம் பக்கம் பார்க்க)

# பன்னிரண்டு வயதில் பாதி ராஜ்யம்

*(பெரியோர் எல்லாம் பெரியரும் அல்லர்; சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர் என்பது வெற்றி வேற்கை. உருவத்தால் சிறியவர், வயதால் சிறியவர் எல்லாரும் உண்மையிலேயே சிறியவராக இருக்க வேண்டும் என்பதில்லை. அறிவாலும் ஆற்றலாலும் அவர்கள் பெரியோரைக் காட்டிலும் சிறந்தவர்களாக இருக்கக் கூடும். வைணவ ஆச்சாரிய பரம்பரையில் 'ஆளவந்தார்' என்னும் சிறப்புப் பெயர் பெற்ற யாமுனாச்சாரியரின் சிறு வயதில் நடந்த நிகழ்ச்சி ஒன்று இதற்கு ஒரு சான்றாக விளங்குகிறது. அதைத் தெரிந்து கொள்வோமா?)*

பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரையில் தோன்றிய அக்குழந்தை அழகு மிகுந்து விளங்கிற்று. அதன் முகத்தில் அறிவை எடுத்துக் காட்டும் வகையில் சுடரொளி வீசியது. மனைவி, மகன, மருமகள் ஆகியோருடன் பாரதமெங்கிலும் திருத்தல யாத்திரை செய்து வருகையில், யமுனை நதிக்கரையில் பிருந்தாவனத்திற்கருகே அக்குழந்தை அதன் தாயின் வயிற்றில் உருவாகியிருக்க வேண்டும என்பதை ஊகிததறிந்த அதன் பாட்டனார் அக்குழந்தைக்கு யாமுனன் என்று பெயர் சூட்டினார்.

அப்பாட்டனார் வேறு யாருமல்ல. வைணவ உலகில், திவ்விய பிரபந்தப் பாசுரங்களைத் திரட்டி இசையமைத்த மாபெரும் ஆச்சாரியரான நாதமுனிகளே ஆவார். ஆனால், இளம் வயதிலேயே தமது மகன், யாமுனனின் தந்தை ஈசுவரமுனி இறந்து விடவே, வைராக்கியம் மேலிட்டு, அவர் துறவு பூண்டு விட்டார். எனவே, பாட்டனாரின் பராமரிப்பிலும் தாயின் அரவணைப்பிலும் யாமுனன் வளர்ந்து வந்தான்.

உரிய வயதில் பையனைப் பள்ளிக்கு அனுப்பினார்கள். படிப்பில் மிகத் துடியாக இருந்து வந்தான் பாலகன். விரைவிலேயே கல்வியின் பல துறைகளிலும் கற்றுத் தேர்ந்து, ஆசிரியரின் அருமை மாணாக்கனாகத் திகழ்ந்தான் அவன். அப்போது அவனுக்கு வயது பன்னிரண்டே.

'ஆலம்'

கல்வியினால் செருக்குற்றிருந்த புலவர் ஒருவர் பாண்டிய மன்னனின் அவையில் அப்போது தலைமைப் புலவராக இருந்து வந்தார். படிப்பின் உண்மையான பயன் பண்பு என்பதை உணராத வெறும் அறிவுப் பொதியாக இருந்தார் அவர். ஆனால், அவருக்கு அரசனிடம் மிகுந்த செல்வாக்கு இருந்தது. அதனால், அவர் பல அறிஞர்களைச் சொற்போரில் தோல்வியடையச் செய்து, அவர்களிடமிருந்து ஆண்டுதோறும் கப்பம் பெற்று வந்தார். அவருடைய வறட்டு அறிவில் மயங்கியிருந்த அரசனும் அவர் செய்யும் முறையற்ற செயல்களுக்கெல்லாம் இணங்கியிருந்தான். அவரை 'வித்துவஜ்ஜன கோலாகலர்' அதாவது 'அறிஞர்களை அதிரடிக்கச் செய்பவர்' என்று அழைத்து வந்தனர்.

யாமுனரின் ஆச்சாரியரான பாஷ்யாச்சாரியர் என்பவரும் கோலாக



லரின் கொடுமைக்குள்ளாகி, அவருக்குக் கப்பம் செலுத்தி வந்தவர்களுள் ஒருவர். ஆனால், இரண்டு மூன்று ஆண்டுகளாகப் போதிய வருமானம் இல்லாததால் அவரால் கோலாகலருக்கு ஒழுங்காகக் கப்பம் செலுத்த முடியாது போயிற்று.

அரசவைப் புலவரின் மாணாக்கன் ஒருவன் கப்பம் திரட்டுவதற்கென ஒரு நாள் பாஷ்யாச்சாரியரின் இருப்பிடத்திற்கு வந்தான். அப்போது பாஷ்யாச்சாரியர் ஏதோ அலுவலாக வெளியே சென்றிருந்தார். யாமுனன் மட்டுமே பாடசாலையைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

வந்த மாணாக்கன் யாமுனனிடம் வந்து "உன் ஆசிரியர் எங்கே?" என்று மிகுந்த மிடுக்குடன் அதட்டலாகக் கேட்டான்.

யாமுனனோ மிகவும் அமைதியாக "அய்யா, நீர் யார்? எங்கிருந்து வருகிறீர்? என் ஆசிரியரிடம் உமக்கு ஆக வேண்டியது என்ன?" என்று வினவினான்.

ஆனால், அம்மாணாக்கனோ மிகுந்த கர்வத்துடன் "நான் எங்கிருந்து வருகிறேன் என்று உனக்குத் தெரியாதா? அப்படியானால் சொல்கிறேன், கேள்.

பாண்டிய மன்னனின் அவையில் தலைமைப் புலவராக இருக்கும் வித்துவஜ்ஜன கோலாகலருடைய தலை மாணாக்கன் நான். அவருடைய அறிவும் புலமையும் உலகம் முழுவதும் அறிந்தவை. அவர் பெயரைக் கூடக் கேள்விப் படாமல் இருக்கிறாயே நீ. எல்லாச் சாத்திரங்களிலும் அவர் கரை கண்டவர். அறிஞர்களுக்கு அவர் பெயரைக் கேட்டாலேயே உடல் உதறல் எடுக்கும். அவர் சொல்வதற்கு ஏற்படவே நடந்து கொள்வான் பாண்டிய மன்னன்.

அறிவுப் போட்டியில் தமமிடம் தோல்வி யடைந்தவர்களிடமிருந்து அவர் ஆண்டுதோறும் கப்பம் திரட்டி வருவது உனக்குத் தெரியும் என்றே நினைக்கிறேன். உன்னுடைய குரு இரண்டு மூன்று வருடங்களாகத் தாம செலுத்த வேண்டிய தொகையை ஏன் செலுத்தவில்லை? மறுபடியும் எங்கள் குருவுடன் வாதில் மோத விரும்புகிறாரா, என்ன? அவர் தம் மனத்தில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்? அவரிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொள்ளாமல் நான் இங்கிருந்து நகரப் போவதில்லை" என்று முரட்டுத்தனமாகக் கத்தினான்.

யாமுனனுக்கோ அவன் நடந்து கொண்டவிதமோ, அவன் பேசிய பேச்சுக்களோ சிறிதும் பிடிக்கவில்லை

அருவருப்பு அடைந்தவனாய் யாமுனன் அம்மாணாக்கனிடம் "நீ எவ்வளவு பெரிய முட்டாளாக இருக்கிறாய்? எவரிடம் எப்படிப் பேச வேண்டும் என்பது கூட உனக்குத் தெரியவில்லையே. உன் ஆசிரியரிடமிருந்து இந்தத்தானா நீ கற்றுக் கொண்டாய்? உன் நடத்தையையும் பேச்சையும் பார்த்தாலே உனது ஆசிரியர் எப்பேர்ப்பட்டவர், அவருடைய அறிவு எத்தகையது என்பதைப் புரிந்து கொண்டு விடலாம் போல் இருக்கிறதே. மாணவர்களுக்குப் பண்பையும் பணிவையும் கற்றுக் கொடுக்காத ஆசிரியர் அப்பெயருக்கே தகுதியுடையவர் இல்லையே. அற்பமான ஒரு சிறு காரியத்திற்காக உனது மனத்தின் சம நிலையையே இழந்துவிட்டாயே நீ. புலியை எடுத்துச் செல்வதற்குப் புலியையா கிளப்புவார்கள்?

உன்னுடைய குருவுடன் வாதிடுவதற்கு என் ஆசிரியர் வேண்டுமா, என்ன? என்னை முதலில் அவர் வாதில் வெற்றி கொள்ளட்டும். பாஷ்யாச்சாரியரிடம் பயிலும் மிகச் சிறிய மாணாக்கன் ஒருவன் உம்மோடு வாதிட விரும்புகிறான் என்று உன் ஆசிரியரிடம் போய்ச் சொல்.

அவருக்குத் துணிவு இருந்தால், உடனே எனக்குச் சொல்லி அனுப்ப ஏற்பாடு செய்யும்படி அவரிடம் கூறவும். என்னை வாதில் வென்ற பிறகு அவருக்குச் சேர வேண்டிய கப்பத் தொகையைப்பற்றி யோசிக்கலாம்" என்று சொன்னான்.

யாமுனன் கூறியதைக் கேட்ட கோலாகலரின் மாணாக்கனுக்கு மிகுந்த கோபம் ஏற்பட்டது. கண்கள் சிவப்பேறி, உடல் சினத்தினால் பதறியது. உடனே அவன் நேராகத் தனது குருவினிடம் சென்று, நடந்தது அனைத்தையும் அவ்வறே உரைத்தான்.

அவன் வார்த்தைகளைக் கேட்ட கோலாகலருக்கு மட்டுமல்ல, அரசனுக்கும் கூட கோபம் ஏற்பட்டது. அரசவையின் தலைமைப் புலவருக்கே அறை கூவல் விடுத்த சிறுவனின் திமிரை அடக்கியே ஆக வேண்டும் என்று நினைத்தனர் அவர்கள் இருவரும். உடனே மன்னன் வேறொரு ஆளை யாமுனனிடம் அனுப்பி, உண்மையிலேயே கோலாகலருடன் அவன் வாதிட விரும்பினால் அவனை உடனே அவைக்கு அழைத்து வருமாறு ஆணையிட்டான்.

அரசனின் தூதுவனிடம் யாமுனன் "அரசனின் ஆணைக்குக் கீழ்ப்படிவது தான் முறை. ஆயினும், கோலாகலர் போன்ற மாபெரும் புகழ் வாய்ந்த பண்டிதருடன் வாதிடுவதனால், ஒரு புலவருக்குரிய மரியாதைகளுடன் என்னை அழைத்துச் செல்வதையே நான் விரும்புவதாக அரசனிடம் சொல்" என்று மொழிந்தான். யாமுனனின் வேண்டுகோளைச் செவியுற்ற அரசனும் அங்ஙனமே சிறந்த பல்லக்கு ஒன்றையும் ஆட்களையும் அனுப்பி வைத்தான்.

இதற்கிடையில், யாமுனனின் ஆசிரியரான பாஷ்யாச்சாரியர் திரும்பி வந்தார். நடந்ததைக் கேள்வியுற்ற அவர் முகத்தில் கவலைக் குறிகள் தோன்றின. யாமுனனுக்

காக அவர் பெரிதும் வருந்தினர். கோலாகலனே கொடுமை நிரம்பியவன், அரசனே அவன் சொல்வதை எல்லாம் அப்படியே ஏற்றுக்கொண்டு நடப்பவன், தனது தலைமைப்புலவரை அவமதித்தவனுக்கு எத்தனை கொடிய தண்டனையையும் கொடுக்கத் தயங்க மாட்டான் என்பதை அறிந்திருந்த அவர், இளங்கன்று பயமறியாது என்பதைப் போல நடந்து கொண்டு விட்ட யாமுனனுக்கு என்ன தீங்கு நேருமோ என்று பெரிதும் அஞ்சினார்.

ஆனால், யாமுனனே சிறிதும் கலக்கமடையாமல் "நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்? உங்கள் அருளினால் அந்த கர்வம்பிடித்த புலவனை வென்று, அவன் கொட்டத்தை ஒடுக்குவேன். எனக்கு ஆசி கூறுங்கள்'' என்று அவருக்கு ஆறுதல் சொல்லி அவரைப் பணிந்தான்.

அரசன் அனுப்பியிருந்த பல்லக்கும் ஆட்களும் வந்தனர். யாமுனன் பாஷ்யாச்சாரியரை மீண்டும்வணங்கி, அவருடைய அனுமதியுடன் பல்லக்கில் ஏறி அரசவைக்குப் புறப்பட்டான்.

பன்னிரண்டு வயதுப் பாலகன் ஒருவன் முதுபெரும் புலவரான கோலாகலருடன் வாதிடச் செல்கின்றான் என்ற செய்தி கேட்ட நகரத்து மக்கள் அனைவரும் அச்சிறுவனைக் காண வேண்டும் என்று திரண்டு வந்தனர்

சிறுவனின் முகத்தில் வீசிய காந்தியைக் கண்ணுற்ற மக்கள் அவன் வெற்றி பெற வேண்டும் என்று பிரார்த்தனை செய்தனர். நகரெங்கிலும் அவனைப் பற்றியே பேச்சாக இருந்தது.

அரசனுக்கு மிகுந்த கோபம், ஒரு சிறுவன் தனது அவையின் தலைமைப் புலவரை எதிர்க்க வருகிறானே என்று.

"அவனுக்கு எவ்வளவு திமிரும் துணிச்சலும் இருக்க வேண்டும்? ஆனால், பூனையிடம் அகப்பட்ட எலியைப் போல, கோலாகலர் அவனை நசுக்கிவிடப் போகிறார், பார்'' என்று அரசியிடம் அவன் சொன்னான்.

ஆனால், அரசியோ "மாபெரும் பஞ்சுக் குவியலை ஒரு சிறு தீப்பொறி எரித்து விடுவதைப் போல், உமது கோலாகலரின் கொட்டத்தை அடக்கிவிடப் போகிறான் அந்தச் சிறுவன்'' என்று உரைத்தாள்.

"இந்தப் பையன் நிச்சயமாகத் தோற்றுவிடப் போகிறான், என்ன பந்தயம்?'' என்றான் அரசன்.

"அவன் தோற்றுப் போனால், உங்கள் அடிமையின் வேலைக்காரியாக நான் இருக்கிறேன். அவன் வெற்றி அடைந்தால்?'' என்றாள் அரசி.

"அவனுக்கு என் ராஜ்யத்தில் பாதியைக் கொடுத்து விடுகிறேன்'' என்று பந்தயமிட்டான் மன்னன்.

இவ்வுரையாடல் நடந்து கொண்டிருக்கும் போதே பல்லக்கு அரசவையை அடைந்தது. அதிலிருந்து இறங்கிய சிறுவனின் ஒளி மிகுந்த முகத்தைக் கண்டு அனைவருமே வியப்புற்றனர்

ஆனால், கோலாகலரோ அரசியை நோக்கி "இவரா ஆளவந்தார்?'' என்று எள்ளினார். அரசி சிறுவனுக்கு ஆதரவாகப் பேசியது அவருக்குப் பிடிக்கவில்லை.

கோலாகலருக்கு எதிராக ஆசனம் ஒன்று யாமுனனுக்காக அமைக்கப் பட்டது. யாமுனனும் அதில் அமர்ந்து அவையில் இருந்தோர் அனைவருக்கும் வணக்கம் தெரிவித்தான். அவனிடம் தென்பட்ட பணிவு அங்கிருந்தோரைக் கவர்ந்ததைக் கண்ட கோலாகலரின் முகம் சற்றே சுருங்கியது.

எனினும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் யாமுனனிடம் இலக்கணம், தர்க்கம் முதலியவற்றின் எளிமையான விவரங்கள் பற்றிக்கேள்விகள் கேட்டார் கோலாகலர்.

யாமுனனே அவற்றுக்கெல்லாம் அனாயாசமாக விடை கூறிவிட்டு,

"அய்யா, நீங்கள் என்னைச் சிறுவன் தானே என்று எண்ணி அலட்சியத்துடன் சுலபமான கேள்விகளையே கேட்கிறீர்கள். அறிவை மதிப்பிடுவதற்கு உருவம் ஓர் அளவுகோல் ஆகாதே. உருவம்தான் அறிவிற்கு அளவுகோல் என்றால், பொதி மாடு கூட உம்மைவிட அறிவில் சிறந்தது என்று ஆகிவிடுமே'' என்று மொழிந்தான்.

அவன் கூறியதைக் கேட்ட கோலாகலர் சற்றே வெகுண்டு "அப்படியானால் நீயே கேள்விகளைக் கேட்கவும். நான் அவற்றுக்கு விடை கூறுகிறேன்'' என்றார்.

"நல்லது. அப்படியே ஆகட்டும். தங்கள் முன் நான் இப்போது மூன்று கூற்றுக்களை எடுத்துச் சொல்கிறேன். உங்களுடைய தர்க்கவியல் ஆற்றலினால் அவற்றை நீங்கள் மறுதலித்து விளக்கம் கூற வேண்டும்.

முதலாவது, உம்முடைய தாயார் மலடியில்லை'' என்று யாமுனன் ஆரம்பித்தவுடன், கோலாகலருக்கும் ஒன்றும் புரியவில்லை.

"இது என்ன பைத்தியக்காரத்தனமாயிருக்கிறதே. அவன் கூறியதற்கு மறுதலிப்பு என் தாயார் மலடி என்பதாகும். என் தாயாருக்கு நான் மகன் ஒருவன் இருக்க அவள் எப்படி மலடி ஆவாள்? எனினும், இவன் கூறுவதை எல்லாம் மறுத்துச் சொல்ல வேண்டும் என்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறோமே'' என்று அவர் குழம்பினார். ஆனால், அதை மறுத்துக் கொள்ள முயற்சி செய்தார்.

அவர் மவுனமாக இருப்பதைக் கவனித்த யாமுனன் "என்ன, என்னுடைய முதல் கூற்றை உம்மால் மறுத்துக் கூற முடியவில்லையா? போகிறது, இதோ என்னுடைய இரண்டாவது கூற்று: அரசன் அறநெறியுடன் இருப்பவன்.''

அதைக் கேட்டவுடன கோலாகல ருக்குத் தலையே சுற்ற ஆரம்பித்து விட்டது.

''அரசனுககு எதிரிலேயே அவன் அறநெறியுடன் இல்லாதவன் என்று மறுத்துக் கூறினுல் நம் கதி என்ன ஆவது? இந்தச் சிறுவன் நம்மை ஒன்றுமில்லாமல் செய்து விடுவான் போலிருக்கிறதே'' என்று அவர் எண்ணினுர்.

"என்னுடைய மூன்ருவது கூற்றை யும் கேட்டுவிட்டு நிதானமாகச் சிந் தித்து எல்லாவற்றையும் மறுதலித்து விளக்கம் கூறுமாறு கேட்டுக் கொள் கிறேன.

மூன்ருவது கூற்ருவது: அரசி பதி விரதை'' என்று யாமுனன் சொன்ன தைக் கேட்ட கோலாகலரின் கோபம் கட்டுக் கடங்காமல் போயிற்று.

''உன்னைச் சிறு பையன் என்று எண்ணிப் போனுல் போகிறதென்று வாளாவிருந்தேன். நீ கூறிய மூன்று கூற்றுக்களும் எவ்வளவு பயங்கர மானவை என்பதை நீ அறிவாயா? அரசனின் அறநெறிக்கும் அரசியின் கற்பிற்கும் களங்கம் கற்பிக்க முற் பட்டிருக்கிருய் என்பதை நீ உணர வில்லை போலும். என்ருல் அவற்றை மறுதலித்துக் கூற முடியாமல் போயிருக்கலாம்.

ஆனுல், அதனுலேயே நீ வெற்றி யடைந்துவிட்டதாக எண்ணிவிட வேண்டாம். இப்போது நீ அவற்றை மறுதலித்து விளக்கம் கூற வேண்டும். அவ்வாறு செய்யத் தவறினுல் உனது உயிரை நீ இழக்க வேணடியிருக்கும்' என்று கோபத்துடன் கூறினுர் கோலாகலர்.

நுணலும் தன் வாயால் கெடும என்பதைப் போல, சிறுவன் தனது அழிவிற்குத் தானே வழி தேடிக கொள்கிருனே என்று அவையினா அஞ்சினர்.

அரசியோ அவன் நல்லபடியாக விளககம அளித்து வெற்றி பெற வேணடுமே என்று தவித்தாள்.

யாமுனனே சிறிதுகூடப் பதற்றம் அடையாமல் மன்னனையும் புலவரை யும் நோக்கி, "இந்நாட்டு மக்கள் எல்லோரும் நல்லதொரு வேந்தனின் ஆட்சியில் நிலமாக இருநது வருவது குறித்து மகிழ்ச்சியாக இருக்கின் றனர். மனு தர்மசாஸ்திரம் போன்ற உயரிய அற நூல்களின் விதிகளின் படி ஆட்சி நன்ருக நடத்தப்பட்டு வருகிறது, இல்லையா?'' என்று கேட் டார்.

அதற்கு அரசனும் ''ஆம் அறவழி தழுவிய பெரியோர்களின் அறி வுரையே நல்லாட்சி நடத்த எனக்கு உறுதுணையாக இருந்து வருகிறது என்பதில் ஐயமேயில்லை'' என்று மறு மொழி உரைத்தான்.

''நல்லது. அப்படியானுல் அநத மனு நூலிலிருந்தே நான் எனது விளக்கங்களுக்கு மேற்கோள்கள் காட்டிச் சான்று தருகின்றேன்.

எனது முதல் கூற்று: கோலாக லரின தாய் மலடியல்ல. அதறகு மறுதலிப்பு, அவள் மலடி எனப தாகும். எப்படி?

ஒரு பிள்ளை பெற்றவள் மலடி என் பது உலக வழக்கு. கோலாகலர் தமது தாய்க்கு ஒரே மகன் என்பது எல்லாரும் அறிந்த ஒன்று ஆகும். எனவே, அவர் தாய் மலடி எனக் கூறுவதில் தவறு என்ன?

இரண்டாவது கூறறு: அரசன் அற நெறியுடன் இருப்பவன. அதற்கு மறுதலிப்பு, அரசன் அறநெறியில் லாதவன என்பதாகும். எப்படி?

அரசன் தனது குடி மக்களின் வரு மானத்தில் ஆறில ஒரு பங்கினை அடைவதற்கு உரிமை கொணடவன் என்று மனு நூல பகருகின்றது. இது அவர்கள செய்யும நல்வினை, தீவினை இரண்டுக்கும கூடப் பொருநதும அலலவா?

இக்கலியுகத்தில் தர்மமே ஒரு காலின்மீது நிற்பதாகவும அதர்மம் மூன்று கால்களின்மீது இருப்பதாக வும் சொல்லப்படுகிறது. எனவே, அரசன் நல்ல முறையில் ஆட்சி நடத்த வேணடும் என்று விரும்பினு லும்கூட, கலியுகத்தின் விளைவினுல்,



திருநகரி கோபுரங்கள்-என். ராமகிருஷ்ணு-மாயூரம்.

குடிமக்கள் அறநெறி பிறழ்ந்து, தீய வழிகளில் செல்கின்றனர். ஆக அதிக அளவில் இருக்கும் தீய நெறியின் பயன்களில் ஒரு மாபெரும் பங்கையுடையவனாக ஆகிறான் அரசன். ஆதலால், அரசன் அறநெறியில்லாதவன் என்று சொல்வது உண்மைக்குப் புறம்பாகாது, அல்லவா?'' என்று விளக்கிச் சற்று நிறுத்தினான் யாமுனன்.

சிறுவனின் சாதுரியத்தைக் கண்ட அவையினர் வியப்படைந்தனர். ஆனால், மிகவும் கொடூரமானதாகத் தோன்றும் மூன்றாவது கூற்றுக்கு எப்படி இவன் விளக்கம் தரப் போகிறான் என்பதை அவர்கள் ஆர்வத்துடன் எதிர் பார்த்திருந்தனர்.

யாமுனன் தனது வாதத்தைத் தொடர்ந்தான்.

"எனது மூன்றாவது கூற்று: அரசி பதிவிரதை. அதன் மறுதலிப்பு, அரசி பதிவிரதை இல்லை என்பதாகும். கேட்பதற்கு இது நிரம்பவும் கொடுமை நிறைந்த ஒன்றாகத் தோன்றும். ஆனாலும், அதே மனு நூலிலிருந்து இதற்கும் சான்று காட்ட முடியும். அரசருக்கும் மற்றுமுள்ள பெரியோர்களுக்கும் ஒன்று மட்டும் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அரசியின் கற்பைச் சர்ச்சைக்குரியதாக்குவது என் நோக்கம் இல்லை.

அரசனானவன் அக்நி, வாயு, சூரியன், சந்திரன், யமன், குபேரன், வருணன், இந்திரன் என்னும் தேவதைகளின் உருவகமாகவும் இருக்கிறான் என்பது மனுநூல். எனவே, அரசி அரசனை மணக்கும்போது அஷ்ட திக்குகளைக் குறிக்கும் இத்தேவதைகளையும் மணந்தவள் என்றாகிறது, இல்லையா? எனவே, அவள் பதிவ்ரதை இல்லை என்பது தவறாகுமா?'' என்று யாமுனன் தனது வாதத்தை முடித்தவுடன், அவனுடைய ஆழ்ந்த புலமையும் எவருக்கும் களங்கம் கற்பிக்காத வகையில் அவனுக்கிருந்த வாதிடும் வல்லமையும் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தின.

சிறு பிள்ளையே ஆனாலும், அவனுக்கிருந்த அறிவாற்றலைக் கண்டு கோலாகலர் வெட்கித் தலை குனிந்தார்.

யாமுனனின் வெற்றியைக் கண்ட அரசியோ "உண்மையிலேயே நீ ஆள வந்தார் தான்'' என்று அவனை உச்சி மோந்து மடியில் அமர்த்திக் கொண்டாள். அவளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை அவள் முகத்தில் தெளிவாகக் காண முடிந்தது.

அரசனும் "ஆளவந்தாரே! அறிவினால் செருக்குற்றிருந்த முதுபெரும் புலவரான கோலாகலரை நீ உமது வாதத் திறமையினால் இன்று வெற்றி கொண்டுவிட்டீர். எண்ணற்ற அறிஞர்களுக்குத் தீங்கு செய்த இவருக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் தரலாம்

அது மட்டுமில்லை. இவருக்கு ஆதரவு அளித்துவந்த நானும் ஒரு வகையில் குற்றவாளி தான். நீர் விதிக்கும் எந்தத் தண்டனையையும் நான் ஏற்கச் சித்தமாயிருக்கிறேன்," என்று கூறினான்.

''அரசே! மன்னன் நேர்வழியிலிருந்து சிறிதே விலகிச் சென்றாலும் அவனை நல்வழிக்குக் கொண்டு வருவதே அரசவையில் இருக்கும் பெரியோர்களின் கடமை ஆனால், அறிவிருந்தும் பணமும் பணிவுமில்லாத கோலாகலர் அவ்வாறு செய்யாமல் வேலியே பயிரை மேய்ந்த மாதிரி நடந்து கொண்டார். அபகாரம் செய்தவனிடத்தும் எவன் ஒருவன் நல்லவனாக நடந்து கொள்கிறானோ அவனே உண்மையான நல்லவன் என்பது ஆன்றோர் வாக்கு.

உங்களுக்கு ஒரு தண்டனையும் வேண்டாம். கோலாகலர் முன் போலவே உங்கள் அவையில் இருந்து வர வேண்டும் என்பதை எனது அவா,'' என்று யாமுனன் பெருந்தன்மையுடன் கூறியதைக் கேட்ட கோலாகலர் அச்சிறுவன் முன்பு தாம் எத்தனை சிறியவர் என்பதை எண்ணி வெட்கமடைந்தார்.

அரசனும் யாமுனனின் பெருந்தன்மையைப் பாராட்டி, ''ஆளவந்தாரே, இப்போது நான் எனது உறுதிமொழி ஒன்றை நிறைவேற்ற வேண்டும். நீர் வாதில் வெற்றியடைந்தால் உமக்கு எனது ராஜ்யத்தில் பாதியைக் கொடுப்பதாக எனது மனைவியிடம் பந்தயம் கூறினேன். எனவே, எனது ராஜ்யத்தில் பாதியை நீர் மனமுவந்து ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்று கூறி, யாமுனனுக்குத் தனது அரியாசனத்தில் சரியாசனம் தந்து, அவனைத் தன்னருகில் வைத்துக் கொண்டான்.

★



பஞ்ச பாண்டவ ரதம்-மகாபலிபுரம்-எஸ். பத்மநாபன்-நாகர் கோவில்.

# பிரணய கலகம்

டாக்டர். சு. வெங்கடராமன்,
எம்.ஏ., பி எச்.டி.,
மதுரை-21

**அறிமுகம் :**

அரையர் சேவையின் ஒரு நாள் நிகழ்ச்சி பிரணயகலகம் என்பதாகும். வைணவத் திருக்கோயில்களில் இறைவனின் - உற்சவரின் - திருமுன் நடைபெறும் கலை அரையர் சேவை மார்கழி மாதத்தில் அத்யயன உற்சவத்தில் ஆழ்வார் பாசுரங்களை இசையுடன் பாடி, அபிநயித்து அவற்றின் வியாக்யானங்களைக் கூறும் இக் கலைஞர் அரையர் ஆவர். அரையர் என்ற சொல் அரைசர் ( = அரசர் ) என்று பொருள்படும்; ஆழ்வாரின் பாசுரங்களுக்கு இவர்கள் அரசர் ஆவர். ஆழ்வாரின் பிரதிநிதியாயிருந்து அரையர் இப்பணியைச்செய்கின்றனர், பாசுரங்களைச் சொல்லுவதால் (அறைதல் — சொல்லுதல்) இக்கலைஞர் அரையர் என்று அழைக்கப் பெற்றனர். இயல், இசை,கூத்து என்ற முக்கூறுகளையும் தன்னுள் கொண்ட முத்தமிழ்க் கலை அரையர் சேவை. ஸ்ரீரங்கத்திலுள்ள இறைவன் நம்பெருமான் இவர்களுக்கு அரையர் என்று பட்டம் அளித்தான். இவர்களை இசைகாரர், நம்பாடுவார், விண்ணப்பஞ் செய்வார் என்று கோயிலொழுகு, குரு பரம்பரை, வியாகயானங்கள் கல்வெட்டு ஆகியன கூறும்.

அரையர் சேவை கொண்டாட்டம் பாசுரததை இசையுடன பாடுதல், பாசுரத்திறகு அபிநயம் செய்தல், பாசுர உரை சொல்லுதல என்ற பிரிவுகளாக அமையும, கொண்டாடடம் என்பது இறைவனின் புகழ்பாடுதல் ஆகும். அரையர் கூறும் வியாக்யானம் தமபிரான்படி எனப்படும். அரையர் 'தமபிரான்மார்' என்றழைக்கப்படுவதால் அவர்களின் உரை இப்பெயர் பெற்றது. அவ்வுரை இன்றளவும் அச்சாகாமல் ஏட்டுச் சுவடியாக அவர்களிடம் உள்ளது.

**நடைபெறும் காலம்**

மார்கழி மாதத்தில் வைகுண்ட ஏகாதசிக்கு முன் உள்ள பத்து நாட்களும் பகல்பத்து எனப்படும். வைகுண்ட ஏகாதசி தொடங்கிப்பின் உள்ள பத்து நாடகளும் இராப்பத்து எனப்படும். பகல் பத்து, இராப் பத்து விழா திருவத்யயன உற்சவம் என்றும் அழைக்கப்பெறும். ஆழ்வார்களின் அருளிச் செயல முழுவதும் இந்நாட்களில் அரையரால் அபிநயிக்கப் பெற்றும் கோஷ்டி சேவையில் ஓதப்பெற்றும் வருகின்றன. அரையர் கூறும் உரையை இறைவன் கேட்கிறான். இது இந்த இலக்கிய விழாவின் சிறப்புக்கூறு. இராப் பத்து நாட்களில் திருவாய்மொழி பாசுரங்களை அரையர் சேவித்து அபிநயித்து உரைக்கிறார். பத்தாம்நாள் இரவு நிகழும்நிகழ்ச்சி பிரணயகலகம் ஆகும். ஆழ்வார்திருநகரியில் இராப் பத்தின் பத்தாம் நாள் அன்று காலை இறைவன் பொலிந்துநின்ற பிரான் புறப்பாடாகி வீதியுலாச் செல்கிறார். நெடுநேரங்கழித்து திரும்பும் அவரை (மாலை 5 மணி அளவில் கோயிலுள் திரும்புவார்.) நாச்சியார் ஊடிக் கொண்டு அனுமதிக்க மறுப்பார். கதவு திறக்குமாறு அவர் தம தேவியரை அழைகக ( ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி, ஆதிநாச்சியார் என அருளப் பாடிடுவர்) தேவியர் மறுத்து விடுவா. எனவே, அவர் உடையவர் சன்னிதி வழியே உள்ளே வந்து மணடபத்தில் எழுந்தருளியிருப்பார். நேர் எதிராக மறறொரு மணடபத்தில் நாச்சியார் எழுந்தருளியிருப்பார். இருவருக்கும இடையில் நிகழும் ஊடலை இறுதியில் நம்மாழ்வார் தீர்த்து வைததிடுவார். நம்மாழ்வாருக்காக தணிந்து இருவரும் சேர்நது காட்சி கொடுப்பர். இரவு 7-00 மணி அளவில் தொடங்கி ஏறத்தாழ ஒன்றரை மணி நேரம் இந்நிகழ்ச்சி நடைபெறும்.

இராப்பத்து நாட்களில் தினமும் இறைவன் பக்தி உலாவுவதும் நமமாழ்வாருக்குத் திருமுடி சேவை ஆதலும் உண்டு. கோயிலுக்கு வெளியே உள்ள ஒரு கொட்டகையில் இறைவன் உலாவுதல் - சிறிய தோளுக்கினியானில் உற்சவரை எழச் செய்து, முன்னும் பின்னுமாகச் செல்லுதல் பக்தி உலாவுதல் ஆகும். நம்மாழ்வாரின் திருமுடியை இறைவனின் திருவடியில் சேர்த்து வைத்தல் திருமுடி சேவை. இநநிகழ்ச்சி உயிரை நோக்கி இறை வந்து ஆட்கொண்டு தன் திருவடியை அதன் உயிரின் தலையில் சூட்டி அருள் செய்தல் என்ற பெருநிலையின் விளக்கமாகும். இவை ஆன பின்னரே, இராப்பத்து மண்டபத்திற்கு இறைவனும் நம்மாழ்வாரும் எழுந்தருளுவர். அதன் பின் அரையர் அன்றைய பாசுரத்தை இசைத்து, அபிநயித்து உரை கூறுவார். இராப்பத்து மணடபத்தில் நிகழும் திருவாய்மொழி வியாக்யானம் சொல்லுவதை திரை கட்டிக் கொண்டு அரையா கூறுவாா. திருவாய்மொழி பகவத் விஷயம் என்ற படியால், முறையாக ஓராண்வழியில்- ஆசிரியரிடம மாணவன கேட்கும் மரபில் - அதைக் கேட்க வேண்டும் எனபதால் இந்த நடைமுறை உள்ளது. அரையரின இசை, அபிநயம் ஆகியவற்றை அனைவரும் காணலாம். திருவாய்மொழி உரைக்கு மட்டும் இவ்வரையறை உணடு. இது இராப்பத்து நாட்களில தினமும் இரவு நிகழும் நடைமுறை.

பத்தாம் நாளில பிரணய கலகம் நிகழ்ச்சி மட்டும் இம்முறைக்கு மாறுபட்டது: இறைவி-இறைவன் இடையில் ஏற்படும் ஊடல், அதனை நம்

மாழ்வார் தீர்த்து வைத்தல், இருவரும் சமாதானமாகி ஆழ்வாருக்காக இணைந்து காட்சிதருதல் ஆகிய நிகழ்ச்சிகளும் அதன்பின் பதினேராம் நாள் நிகழ்ச்சியாக (அதிகாலை 1-00 மணி தொடங்கி) நம்மாழ்வார் தத்துவப் போர்வை சார்த்திக் கொள்ளல், களைதல், உடலுடன் பரமபதம் செல்லல், இறையுடன் ஒன்றுபடல், 'பரமபதம் வேண்டாம் மண்ணுலக வாழ்வே வேண்டும்' என்று கூறி மீளல் ஆகிய கூறுகள் அடங்கிய சாற்றுமுறையும் இராப் பத்து விழாவின் இன்றியமையாத பகுதிகள். எனவே இவ்விரு நிகழ்ச்சிகள் மட்டும் அனைவரும் காணலாம படி-திரை ஏதுமின்றி - மண்டபத்தில் நிகழ்கிறது. நம்மாழ்வாரின் திருவாய்மொழி, உயிரின் பயணம் ஆக அமைந்துள்ளது என்பர். நம்மாழ்வார் பரமபதம் எழுந்தருளல், அங்கு அவர் பெறும இறையுடன் இணையும் அனுபவம் என்பவற்றை வெளிப்படுத்தல் இராப்பத்தின் அடிப்படை. எனவே, சாற்றுமுறை இதன் மையப் பகுதியாகிறது. அந்த நிகழ்ச்சியும் அதற்கு அடிப்படையான பிரணய கலகமும் அனைவரும் காணவேண்டும் என்ற வகையில் மண்டபத்தில் நிகழ்கின்றது.

சொற்பொருள் விளக்கம்

பிரணய கலகம் என்ற வடசொல்லுக்கு ஊடல் என்பது பொருள் (ப்ரநய கலகம்; உயர்வான - மேலான- ஒப்பற்ற என்னும் பொருளில் 'ப்ர' என்ற முன்னெட்டு அமைகிறது; நய கலகம்-அன்பால் விளையும் சண்டை சிறு ஊடல் என்பதாகப் பின் பகுதி அமைகிறது) காளிதாசனின் இலக்கியங்களில் இச்சொல்லாட்சி இப் பொருளில் பயின்று வந்துள்ளது. நாச்சியார் பெருமாளுடன் ஊடிக கொள்கிறார்; எளிதாக அதனை விட்டுக்கொடுக்க மறுக்கிறார். இறுதியில் அன்புமிக்க அடியவரின் வேண்டுகோளுக்காக விட்டுக் கொடுத்து சமாதானமுறுகிறார்.

நிகழ்ச்சி வருணனை

அன்று காலை வீதியுலாச் செல்லும் போது பெருமாளுடன் அரையரும் செல்கிறார். வேறு எந்த இசைக கருவியுமில்லாது (தவில், நாயனம் போன்ற உலாவிற்குரியவை கூடச் செல்வதில்லை) தம்முடைய தாளங்களை வைத்து ஒலி எழுப்பி, அரையர் 'ஆரா அமுதே' என்ற திருவாய்மொழியை இசைக்கிறார். பின் பகல் முழுவதும் வெளியில்-மாட வீதியில்- மண்டபத்தில் இருந்துவிட்டு, இரவு கோவிலுக்குத் திரும்புகிறார். உள்ளே நுழையும் போது வாயிற்கதவு அடைத்திருக்கவே, அவர் தம் தேவியரை அழைக்கிறார். கதவு திறக்கப் படாதிருக்கவே வேறு வழியில் உடையவர் சன்னதி வழியே - உள்ளே புகுந்து மண்டபத்தில் எழுந்தருளுகிறார். அவருக்கு நேர் எதிராக நாச்சியார் எழுந்தருளுகிறார். இருவரும் எதிரும்புதிருமாக வீற்றிருக்கின்றனர்.

கோயில் கட்டியக்காரன் சென்று அரையரை அழைத்து வருகிறன். அரையருக்குத் தீர்த்தம், துழாய், சடாரி ஆகிய மரியாதைகள் ஆகி, அருளப்பாடிட்டபின் அவர் தம் பணியைத் தொடங்குகிறார். வீதியுலாச் சென்ற பெருமாள் தாம் வருவதற்கு நேரமாக அமைந்த காரணம் என்ன என்று கூறுகிறார், வழியில் உள்ளவற்றைப் பார்த்துக் கொண்டு வந்ததால் நேரமானதே தவிர வேறு காரணமில்லை என்கிறார் பெருமாள் சொல்வதை நாச்சியாரிடமும், நாச்சியார் சொல்வதை பெருமாளிடமும் மாறிமாறிச் சென்றுரைக்கிறார் அரையர். இவ்வாறு சென்றுரைக்கையில அரையரின் நடையழகும் முகபாவம் அபிநயம் ஆகியனவும் ஆழ்வார் திருநகரி அரையருக்கே உள்ள தனிச் சிறப்புக்கள். பெருமாள் கூறுவதைக் கேட்ட பிராட்டி, ''உம் உடம்பிலே வேற்று மணம் வீசுகிறது. வரும் வழியில் எங்குச் சென்று வந்தீரோ, அங்கேயே 'போம்போம்' என்று கூறுகிறள். உடனே பெருமாள் மறுமொழியாக, 'கண்டவர் யாரோ? உரைத்தவர் யாரோ? எங்கும் போகவில்லை. குடத்தில் கையை விட்டுப் பாம்பைத் தீண்டி, எங்கும் போகவில்லை, என்பதை நிறுவுவோம்' என்று சூளுரைக்கிறார், மீண்டும், பிராட்டி, ''உம்முடைய சத்தியமெல்லாம் தெரியாதா'' என்று கூறி ஊடிக்கொள்கிறள்.

குலசேகர ஆழ்வாரின் 'மின்னெத்த நுண்ணிடை' (பெருமாள் திருமொழி 6-5), திருமங்கை ஆழ்வாரின் 'காதில் கடிப்பு', 'துவராடையுடுத்து' (பெரிய திருமொழி 10.8.1, 10 8 2) ஆகிய பாசுரங்களைப் பாடி அரையர் அபிநயிக்கிறார். இப்பாசுரங்கள் நாயகி பாவத்தில் பாடப்பட்டவை. அமலன் ஆதிபிரானிடம் ஊடிய ஆய்ச்சியர்பாடிய இப்பாசுரங்களை, ஊடிய நாச்சியார்கூற்றாக அரையர் பாடி அபிநயித்துவிட்டு, நம்மாழ்வாரின் 'மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார்' (திருவாய்மொழி 6.2.1) என்ற பாசுரத்தைப் பாடி அபிநயிக்கிறார்; உரை கூறுகிறார். இப்பாசுரம் 'பிரேமத்தில் பெண்பேச்சாக' ஊடிய பெண்ணின் கூற்றாக - அமைந்தது. இப்பாசுரத்தின் ஈற்றடியில், 'என்னுடைய பந்தும் கழலும் தந்துபோகுநம்பீ' என்று வருகிறது. அரையர் இவ்விடத்தை விரிவாக அபிநயிக்கிறார். பிராட்டி அருகில் நின்று கொண்டு பெருமாளைப் பார்த்து என்னுடைய பந்தும் கழலும் தந்து போகு நம்பீ' என்று கூறி பெருமாளிடம் வருகிறார். பெருமாளிடம் இருந்து பந்தை எடுத்துவந்து பிராட்டியிடம் அளிக்கிறார். பிராட்டி அப்பந்தை ஏற்க மறுத்து விடுகிறார் என்பதை, பெருமாளை நோக்கி, 'இது நம்முடைய பந்து அல்ல; உம்முடைய ஆச்சியர் பந்து' என்று கூறி வீசி எறிகிறார், மீண்டும் பெருமாளிடம் வந்து முத்துடைய பநதை அவரிடம் இருந்து பெற்று நாச்சியாரிடம் கொடுக்க, பிராட்டி அதை ஏற்கிறார். இருந்த போதிலும் ஊடல் தீரவில்லை.

இவ்விடத்தில் நம்மாழ்வாரை எழுந்தருளச் செய்கிறார்கள். நம்மாழ்வார் வந்து, இருவருக்கும ஊடல் தீர்த்து வைக்கிறார். இப்பொழுது அரையர் பெருமாள், நாச்சியார் கொண்டாட்டம் கூற, இருவரும் சேர்த்திக் கோலத்தில் காட்சி தருகின்றனர்- பிரணயகலகம் தீர்ந்து இருவரும் எழவேணும் என்ற ஸ்வாமி நம்மாழ்வார் வேண்டுகோளை அரையர் கூற, ஊடல் தீர்கிறது. சில வைணவத்தலங்களில் இந்நிகழ்ச்சிக்கு மட்டையடி உற்சவம் எனவும் பெயர் உண்டு. ஊடிய நாச்சியாா பெருமாளை மட்டையால் அடிப்பதால் அப்பெயர் வந்தது என்பர்.

**தத்துவ விளக்கம்**

இராப்பத்து முழுவதும் திருவாய்மொழி விழா. இவ்விழாவின் முடிவு நாளில் ஸ்வாமி நம்மாழ்வார் உடலோடு பரமபதம் சென்று, 'அச்சுவை வேணடேன்' என்றுகூறி மீண்டும் மணணுலம் வந்துவிடும் சாற்றுமுறை நிகழ்கிறது. திருவாய்மொழி வேதம ஆக, பகவதவிஷய உரையை அரையர் கூற பெருமாள் கேட்கும் ஏறறம நிகழ்கிறது. ஸ்வாமி நம்மாழ்வார் பரமபதம் செல்லவிருக்கையில் தாயார் ஊடியிருப்பது அவருடைய புருஷகார இயல்பிற்கு ஏற்றதன்று. (தத்துவமன்று தகவன்று எனபபாடிய பட்டர்பிரான் கோதையான அவளே இசசெயல் செய்யலாமோ?) உயிர்களுக்கு இறைவன் அருள்செய்ய, தாயார் செயயும் பரிந்துரை (சேதனனைத் தன் அருளாலே திருத்தும் தாயார்) மிக முக்கியமானதன்றோ. அவனும் அவளும் ஸ்ரீ: பதியாக - அகலகில்லேன் இறையும் என அலர்மேல் மங்கை உறை மார்பனுக-சேர்த்திக் கோலத்தில் காட்சி தருவது இன்றியமையாதது. இதனைச் செய்து ஸ்வாமி நம்மாழ்வார் தம்முடைய ஆசார்ய ஸ்தானத்தை நிலைநாடடிக் கொளகிறார். அன்புடைய அடியாரின் ('ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மனனி வழுவிலாவடிமை செய்து வாழும் பத்துடை அடியவரான ஸ்வாமி நம்மாழ்வாரின்) வேணடுகோளுக்குஏற்ப இறைவனிடம கொணட ஊடலைத் தாயார் விட்டுக் கொடுக்கிறார். இந்நிகழ்ச்சியின மூலம் பிரபன்ன ஜனகூடஸ்தரான சடகோபரின் ஏற்றம் நிலைநாட்டப்படுகிறது.

★

# ஆழ்வார் வாக்கில் அன்மையும் இன்மையும்

அன்மையும, இன்மையும் வெகு நெருங்கி நிற்கும் இரண்டு தனித் தன்மைகள். ஒன்று வேறென்ருக இல்லாத போது, அன்மை வருகிறது. இது அது அல்ல என்போம். கம்பர் கவிஞர், நாடகாசிரியர் அல்ல என்று கூறுவோம். இவர் என் ஆசிரியர் அல்ல என்போம்.

இன்மை, இல்லை என்பதை உணர்த்துதால் ஆகும். புத்தகம் என்னிடம் இப்பொழுது இல்லை; கொடுத்து விட்டேன் என்னும் இடத்தில் இல்லை என்பதற்குப் பதிலாக அல்ல என்று கூற முடியாது. தமிழை விட இனிய மொழி ஏதும் இல்லை எனலாம. அல்ல என்ற சொல் வராது.

இந்த இன்மை அன்மை வேறு பாட்டினை ஆழ்வார்களின் பாசுரங்களிலிருந்தே தெளியலாம்.

தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச் செய்த திருமாலைப் பாசுரம். அவருடைய அனன்யபக்தி மிகப் பிரசித்தமானது. மற்றெல்லா இறைவடிவங்களையெல்லாம் வழிபட்டு ஏமாறுதீர்கள் என்றுப் போல் எச்சரிப்பார். பாட்டில் வார்த்தைகள் சற்றுக் காரசாரமாகவே விழுந்திருக்கின்றன. மூளையில்லா மனிதர்களே என்று அழைகக முற்படுகிருர் விப்ர நாராயணர்.

மறறும ஓர் தெய்வம உண்டே
மதியிலா மானிடஙகாள
உறறபோதனறி நீங்கள
ஒருவன என்றுணர மாட்டீர்
அறறமே லொன்றறியீர்
அவன் அலலால் தெய்வம இலலை
கற்றினம மேய்தந எந்தை
கழல் இணை பணிமினீரே.

மாடு கன்று மேய்த்த எம்பெருமான் திருவடியை வணங்குங்கள் என்று ஈற்றடியில் கூறும் ஆழ்வார், காரணமும் சொல்கிருர்.

அவன் அலலால் தெய்வம் இல்லை. இந்த ஓர் அடிக்காகத்தான் நாம் இவ்வளவும் சுற்றி வந்தது. இதில் அன்மையும், இன்மையும் ஒருங்கே உள்ளன.

மாடு மேய்த்த எநதையை விட்டால், வேறு எவரும் தெய்வம் ஆக மாட்டார்கள். இவா இறைவன் அல்ல எனில், எவருமே ஈசன் அல்ல. அப்புறம் தெய்வமே இல்லை என்ருகி விடும்.

சடகோபர் ஓர் இடத்தில், வீண் செயல்களில் இறங்காதே என்பார். வீண செயல் என்ருல், பயன் தராத காரியம். அதில் இறங்கி என்ன பயன்? ஆகவே பயன் உள்ள காரிய

திரு ர வேங்கடரத்தினம்
நெய்வேலி.

மாகச் செய் என்பது அவர் உபதேசம்.

நம்மாழ்வார் நம்மைத் திருமாலிருஞ்சோலை சென்று வணங்கச் சொல்கிருர். ஆழி மழைக்கண்ணன் உறையும் திருக்கோயில் அது. காண்போரை மயக்கும் அதிசயத் தோட்டங்கள நிறைந்த மலை திருமாலிருஞ் சோலைமலை.

பாசுரம் வருமாறு :-

பயனல்ல செய்து பயனஇலலைநெஞ்சே
புயல் மழை வண்ணர் புரிந்துறை கோயில்
மயல மிகு பொழில் சூழ் மாலிருஞ் சோலை
அயன்மலை அடைவதது கருமமே.

அழகர் மலை சென்று சேவிப்பது ஓர் உயரிய காரியம் ஆகும். அயன்மலை, அயன் ராஜவேடம் என்பது போல! உயரிய, பெருமை மிகுந்த மலை. அங்கெல்லாம போகாது வீணுக்கிக் கொண்டிருப்பதா காலத்தை?

பயனஅல்ல செய்து பயன் இல்லை நெஞ்சே

வெகு எளிதாகக் கூறிவிட்டார். பயன் அல்லாத காரியத்தைப் புரிவதில் பயன் இல்லை. பயன் இதில் இல்லை; எனவே இது பயன் அல்லாத வீண் செயல்!

இன்னெரு திருவாய் மொழிப் பாசுரமும் இங்கே நாம் பார்க்கலாம். எம்பெருமானை இல்லை. இல்லை, மன்னிக்கவும், எது சொன்னுலும் அல்லன், அல்லன் என்று விளக்கும் பாடல் அது. இறைவனின் உருவத்தையோ தன்மையையோ இன்ன வகை என எவரும் கூறி விட முடியாது. விதவிதமாக, வேண்டுமாறெல்லாம் வந்து போகும் எம்பெருமான் வேண்டாதவர்க்குக் கிட்டாதவராகவே இருப்பதும் உண்டு.

ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா
அலியும் அல்லன்
காணலும் ஆகான் உளன்அல்லன்
இல்லை அல்லன்
வேணுங் காறவேணும் உருவாகும்
அலலனுமாம்
கோணைபெரி துடைத்து
எம்பெம்மானைக் கூறுதலே.

ஐயன் செய்தவறறையெல்லாம் எடுத்தியம்புதல் பெரிய காரியம் என்று முடிக்கும ஆழ்வார், ஆண அல்லன், பெண் அல்லன என்று தொடங்குகிருர். இடையில் ஓர் அருமையான விளக்கம் கடவுளுக்குச் சடகோபர் வழங்குவார். கடவுளை உண்டு என்பதற்கு மில்லை. இல்லை எனக்கொள்வதும் சரியல்ல.

உளன் அல்லன் இல்லை அல்லன்:

கடவுளை ஏற்றுக்கொள்ளாதவர்கள் அவரே இல்லை என்று ஒரேயடியில் மறுத்துக் கூறுவார்கள். அதை ஆழ் வார் ஏற்பாரா? இல்லை அல்லன் என் பது அழகிய பேச்சு. இன்மைக்கு இடம் தாரதவன் எம்பெருமான். எனவே இல்லை அல்லன் எம்பெம் மான்.

இதுவும் திருவாய்மொழிதான்.

முடிச்சோதியாய் உனது முகச்
சோதி மலர்ந்ததுவோ—

இவ்வாறு தொடங்கும் பத்தில் ஓர் இனிய பாசுரம். வேதம் பிரமாத மாகப் பேசுவதெல்லாம் எம்பெரு மானின் புகழையே. அப்படி அந்த நாளிலிருந்து வேதம் எல்லாம் புகழ்ந்து ஐயனைப்பாட, நான் வந்து புதிதாய் என்ன சொல்லி வாழ்த்து வேன், என்பார் நம்மாழ்வார்.

ஓதுவார் ஓத்தெல்லாம் எவ்வுலகத்
தெவ்வெவையும்
சாதுவாய் நின் புகழின் தகை
யல்லால் பிறிதில்லை
போதுவாழ் புனந்துழாய் முடியினாய்,
பூவின் மேல்
மாதுவாழ் மார்பினாய்! என்
சொல்லியான் வாழ்த்துவனே!

நறுமணம் மிகுந்த துளசித் தளிரைச் சூடிய முடியினாய் என்று, மலர் மகளை மார்பில் கொண்டுள்ள எம் பெருமானை அழைத்து ஆழ்வார் கூறுகிறார். வேதம் யாவும் பேசுவது நின் புகழின் பெருமையினை அன்றி வேறில்லை. அப்படியிருக்க, நான் என்ன புதிதாய்ச் சொல்லி வாழ்த்தக் கூடும்!

நின் புகழ் அல்லால் பிறிது இல்லை

இந்த அன்மை—இன்மை பிரயோகத் தில் கரை கண்டவர் சடகோபர்தான்.

கண்ணபிரானின் திருவடியைத் தொழுமாறு சொல்ல வருகிறார். அந்த நாளில் மண்ணின் பாரம் நீக்கு தற்காக வடமதுரைநகரில் அவதாரம் செய்தார்.

கண்ணன் அல்லால் இல்லை கண்டீர்
சரண் அது நிறக வந்து
மண்ணின் பாரம் நீக்குதற்கே
வடமதுரைப் பிறந்தான்
திண்ண மாறும் உடைமை உண்டேல்
அவனடி சேர்ந்துய்மினோ
எண்ணவேண்டா நும்மதாதும்
அவன் அன்றி மற்றில்லையே.

இந்தப் பாசுரத்தின் முதல் அடியி லும், ஈற்றடியிலும் ஆழ்வார் பெரு மாள் பெருமையை அழகாகப் பேசு வார்.

கண்ணன் அல்லால் இல்லை
கண்டீர் சரண்...
...அவன் அன்றி மற்று இல்லையே

கண்ணபெருமானைவிட்டால், அடைக் கலம் ஏதும் இல்லை—இது முதல் அடி.

ஐயன் அல்லாமல், வேறு எதுமே தனித்து இருந்துவிடமாட்டாது என உறுதியோடு கூறுகிறது முடிப்பு.

வித்துவகோட்டு அம்மானைப் பெரு மான் திருமொழியில் பாடுவார், குல சேகர ஆழ்வார்.

தருதுயரம் தடாயேல் உன் சரண்
அல்லால் சரண் இல்லை

இங்கு முதல் சரண், இறைவனின் சரணத்தினை - திருவடியைக் குறிப் பிடும். அடுத்து வரும் சரண், அடைக் கலம் புகுதலைச் சொல்லும்.

எம்பெருமானின் திருவடி மட்டும் இராது போயிருந்தால், அடைக் கலம் புகுதற்கு இடமே, வழியே வகையே இருந்திராது. ஆகவே, குலசேகரர் ஈசனையே நோக்கிப் பாடு வார்.

உன் சரண் அல்லால் சரண் இல்லை

இந்த இன்மை—அன்மையின் இன்றி யமையாமையில், சரணாகதித் தத்து வமே பொதிந்துள்ளது எனலாம்!

★

---

தெரிந்து கொள்ளுங்கள்:

## ஆரத்தி

பண்டிகையின்போது சுவாமிககு ஆரத்தி எடுக்கும்போது மஞ்சள், குங்குமம் போட்டு கரைத்து தட்டில் இரண்டு சின்ன நெய் ஜோதி ஏற்றி வைத்து ஆரத்தி நீரை துளசி செடி யில் ஊற்ற வேண்டும். மனிதர்களுக்கு எடுக்கும் ஆரத்தியில்தான் சுண் ணாம்பு மஞ்சள் போட்டு வீதியில் கொட்ட வேண்டும்.

தகவல்: திருமதி. கமலா மாரியப்பன்.

---

(26-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு முதுகெலும்பானதினால் புலவர்களுககுச் சொற் குற்றம் பொறுக்காது. உதாரணத்திற்குப் புலவர் சீத்தலை சாத்தனாரை எடுத்துக் கொள்ளலாம். ஒரு சமயம் வியாகரண மஹாபாஷ்யம் வெளியிட்ட, பாம் பின் அவதாரமான பதஞ்சலியை அவர் கண்டதும் சம்ஸ்கிருதத்தில் 'தாங்கள் யார்' என்ற கருத்துள்ள சம்ஸ்க்ருதவாக்யத்தை ''கோபவான்'' என்பதற்குப் பதில் "கோர்பவான்'' என்றாராம். அதற்குச் சொற் பிழை கண்டு வருந்திய பதஞ்ஜலி ''ஸர்ப்போஹம்'' என்பதற்குப் பதிலாக 'ஸப்போஹேம' என்றாராம். உடனே அவர் 'ஸர்ப்ப' என்ற சொல்லில் உள்ள 'ர்' என்ற எழுத்து எங்கு என்றாராம். அதற்குப் பதஞ் ஜலி உன்னால் களவாடப்பட்டது என்ற கருத்தில் "த்வயா அபஹ்ருத:'' என்றாராம். இந்த சாஸ்திரத் தில் ''ஸ்போடவாதம்'' என்ற கொள்கைக்குச் சிறப்பு அதிகம்.

(தொடரும்)

# மரக்கரி வியாபாரியும் நாமும்

நம் நாட்டின் வடக்குப் பகுதியில் உள்ள ஒரு கிராமத்தில் ஒரு ஏழை, மரக்கரி வியாபாரம் செய்து குடும்பத்தை நடத்தி வந்தான். அவன் வசிக்கும் இடத்திற்கு வெகு தொலைவில் ஒரு காடு இருந்தது. அவன் அக்காட்டிற்குச் சென்று விறகுவெட்டிக் கொணர்ந்து அவ்விறகை சுட்டுக் கரியாக்கி விற்று வாழ்க்கை நடத்தி வந்தான். மரக்கரி வியாபாரத்தின் மூலம் கிடைக்கும் வருமானம் போதுமானதாக இல்லை.

அப்பொழுது அரசாண்டுவந்த மன்னர் ஏழைகள் சுபிட்சமான வாழ்வு வாழ வேண்டும் என்ற ஈகை உள்ளம் கொண்டவர். எனவே அவரவர்கள் செய்யும் தொழிலுக்கு ஏற்றபடி உதவிகளை தாராளமாகச் செய்து வந்தார். ஏழை மரக்கரி வியாபாரியும் அரசரிடம் சென்று உதவி கோரினான். ஏழை மரக்கரி வியாபாரியின் நிலைமையை உணர்ந்த மன்னர் தன் தர்பாருக்கு அவனை அழைத்திருந்தார். அவனுக்கு நகருக்கு அருகாமையில் உள்ள சந்தன மரக்காட்டை இலவசமாகக் கொடுத்தார். மன்னர் கொடுத்த பரிசைப் பெற்றதும் ஏழை வியாபாரி மனமகிழ்ந்தான். இனிமேல் தமக்கு இன்னல் இல்லை என்றும் உணர்ந்தான்.

மறுநாள் காலை மரக்கரி வியாபாரி அரசன் கொடுத்த சந்தன மரக்காட்டிற்குச் சென்றான். சந்தன மரக்காட்டைப் பார்த்ததும அவனுக்கு ஏற்பட்ட ஆனந்தத்திற்கு அளவேஇல்லை. எல்லா மரங்களையும போல் சந்தன மரமும் கரிக்குப் பயன்படும் எனறு எண்ணினான் ஒவ்வொரு சந்தனமரமாக வெட்டி அவ்விறகை எரித்துக் கரி செய்து அக்கரியை விற்றான். சில ஆண்டுகளாக இவ்வாறு செய்து வந்தான்.

சந்தன மரக்காட்டை இலவசமாக கொடுத்த அரசர் மரக்கரி வியாபாரி நல்ல சீமானாக இருப்பான் என்று எண்ணி அவனை பார்த்து வரப் புறப்பட்டார். பெரியமாளிகையில் மரக்கரி வியாபாரி வசிப்பான்என்று கருதி வந்த அரசன், அவன் பழைய படியே குடிசையில் வசிப்பதைக் கண்டு திடுக்கிட்டார்.

அவனைஅழைத்து "உனக்கு சந்தன மரக்காட்டைக் கொடுத்தேன். நீ சந்தன மரங்களை என்ன செய்தாய்?" என்று மன்னர் வினவினார். தான் திறமையாக வாழ்வதாக எண்ணிய வியாபாரி மன்னரிடம், 'சந்தன மரங்களை வெட்டி சுட்டுக்கரியாக்கி விற்று வாழ்க்கை நடத்தி வருகின்றேன். எல்லா மரங்களையும் வெட்டி விட்டேன். இன்னும் ஒரு மரம் மட்டும் தான் பாக்கி' என்று கூறினான்.

என். ஆர் ஜெயச்சந்திரன், பி.காம்.
காவேரிப்பட்டணம்

மன்னருக்கு அவனது பதில் வேதனையையும் அதிர்ச்சியையும் அளித்தது.

மரக்கரி வியாபாரியைப் பார்த்து மன்னர் "அந்தோ பரிதாபம், இந்த மரங்கள் சாதாரண கரி செய்யப் பயன்படும மரங்களல்ல ஒருமரமே ஆயிரம் பவுன் பெறுமே. அனைத்தையும வெட்டி சுட்டுக கரியாக்கி விட டாயே? கடைசியில் இருக்கும் ஒரு மரத்தையாவது வெடடிக் கட்டைகளாக கடைத்தெருவில் விற்று வாழ்க்கை நடதது" என்று கூறிவிட்டுச் சென்றார். மனனர் சொன்ன படியே செய்து சந்தனக் கட்டைகள் விற்று வாழ்நது வந்தான அந்த மரக்கரி வியாபாரி.

மரக்கரி வியாபாரி கதையின் கருத்து என்ன? சிந்தித்துப் பாருங்கள்! நம் உடம்பே ஒரு காடு. நம் உடம்பில் உள்ள ஆத்மாவே மரக்கரி வியாபாரி. இறைவனே அரசன். நாம் விடும் மூச்சே சந்தன மரங்கள். மரக்கரி வியாபாரி அறியாமையால் சந்தன மரங்களைக் கரியாக்கி வீணாக்கியதுபோல நாம் நம்முடையமூச்சை வாழ்வை, சக்தியை, நேரத்தை உடனே அழியும் இந்திரிய சுகங்களுககாக வீணாகச்செலவழிக்கிறோம். நம வாழ்வு வீணாகக் கழிக்கப்படுகிறது. நம் உடல் நமக்கு ஆத்ம ஞானம் பெறவே ஆண்டவனால் அளிக்கப்பட்டுள்ளது. உண்டு உடுத்தி உறங்குவதிலேயே நாம் நம்முடைய பொன்னான நேரத்தை பாழடிக்கிறோம். வாழ்வு மிகவும் அருமையானது. வாழ்ந்த வாழ்வினை மீண்டும் பெறமுடியாது என்பதை நாம் நம்முடைய வாழ்நாளில் பெரும் பகுதியினை செலவழித்த பின்புதான் உணர்கின்றோம். மரக்கரி வியாபாரியைப் போல வாழாமல் கடந்த நாட்களைப் பற்றி கவலைப் படாமல் இருக்கும் சில நாட்களையாவது செம்மையான நெறிகளில் வாழ முயல வேண்டும்.



## அறிவிப்பு

ஸப்தகிரிக்கென்று ஒரு வருடம் அல்லது அதறகு மேற்பட்ட காலத்திற்கு அனுப்பப்படும் சந்தாத் தொகை மட்டுமே ஏற்றுககொள்ளப் படும். ஒரு வருடத்திற்கும் குறைவான கால அளவுக்காக அனுப்பப் படும் சந்தாத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ. 12/-

# தி. தி. தேவஸ்தானத்தாரின்

# எழுத்தாளர் நிதி உதவித்திட்டம்

## இதுவரை வெளிவந்துள்ள நூல்கள் பின்வருமாறு

1. மாத்வசங்கம் —ஹரிதாஸ பஜனை மஞ்சரி
2. டி. லோகிதாஸன் —வேமன்னவின் வேத வாக்கு,
3. பி. கோபால் —பரமன் அடியார் பத்துப்பேர்
4. சீதாராமன் —ஹனுமன் கதை
5. எம். நாராயணசாமிபிள்ளை —தெய்வீகச்சிந்தனை கள், தனஞ்சயன்,
7. என். சுப்புரெட்டியார் —
வடநாட்டுத் திருப்பதிகள்
சோழநாட்டுத் திருப்பதிகள்
சேரநாட்டுத் திருப்பதிகள் பகுதி (2)
8. ஏ. சீனிவாசன் —கடவுள் வரலாறு
9. என். கிருபானந்தன்–சிறையிருந்த செல்வி
10. ஏ. சீனுவாசன் —திருவரங்க திருநூல்
11. எஸ். சௌமிய நாராயணன் —ஆண்டாள் அவ தாரமும், அருட்செயலும்
11. ஆர். ஷண்முகம்பிள்ளை — திருவேங்கட மஹாத் மியம்
12. கு. தாமோதரன் –திருவாய்மொழித்திறன்
13. கே. வரதாச்சாரி —சுதாரஸ மஞ்சரி (1)
,, (2)
14. பெரிய நாயகம் —இந்துமதம்
15. வி. ரங்கசுவாமி ஐயங்கார் –வேங்கடேஸ்வரரும் வேதாநததேசிகரும்
16. ஆர். கண்ணன் சுவாமி–யக்ஷ பிரஸன்னம்
17. சி.என். கிருஷ்ணமூர்த்தி–திருமலையாறறுப்படை
18. எஸ். கிருஷ்ணசுவாமிஐயங்கார் – ஸ்ரீவைகானஸ சித்தாநத ஸாரம்
19. பண்ணைகோமகன் —ஈசனடியார் பததுபபோ
20. நஜன —ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்யர் வைபவம ராமன பேசுகிறுன், குண்டலினி சகதி
21. பி. என். கிருஷ்ணமாச்சாரியார் – பரமத பங்கம
22. காளி ராஜன் —இறைவழிபாடு
23. திரு. ஆசூரி ராமானுஜதாஸன-பேசும் தெயவம்
24 மாருதிதாஸன் —இநது சமயககருத்துககள
25. கே. வெங்கடசாமி ரெட்டியாா –கலைமகள பிள்ளைததமிழ்
26. எம். ஏ. வெங்கடகிருஷ்ணன் —தொணடைநாட்டுத் திருப்பதிகள்
27. பி. கே. மூர்த்தி — ஸ்ரீ தியாகராஜசுவாமிகள சரித்திரம்.
28. பொன்னை. கோபால் — ஈசனின் எட்டு அடியார்கள்
29. ஆர். இலங்கோதாஸன — திருவடிமாலை
30. எஸ். நடராஜன் —துவைத ஆசார்யர்கள் வைபவம்
31. புலவர். எம். வைத்தியலிங்கம் —சேரமான் நாயன்மார் பாடல்கள்.
32. திருமதி. ராதா ராமனுதன் —ஸ்ரீ பத்மாவதி ஸ்ரீநிவாஸ கல்யாணம்
33. வி. ரங்கசுவாமி ஐயங்கார் — ஸ்ரீராமாயண வாக்ய ரத்னங்கள்
34. ஆர். கோபாலன – அன்னைத் திருச்சதகம்.
35 ஆர். மாணிக்கவாசகம் – திருமந்திர ஆராய்ச்சி.
36. ஏ ராமலிங்கசுவாமி — பேசும் தெய்வம்.
37. ஆர். பார்த்தசாரதி ஐயங்கார் – திவ்ய தேச கீர்த்தனைகள்.
38. மாருதி தாஸன் — ஆழ்வார்கள் வரலாறு.
39. என். ஆர். சம்பத் — நாரத பக்தி சூத்ரம்.
40. ஏ. சுதாகர்—ஆழ்வார்-அன்னமய்யா பாடல் களில் கண்ணன் விளையாட்டுக்கள்.
41. டி. ராஜ்மோகன்ராஜ்—மார்கழித் திங்கள்.
42. கே. ஆர். கிருஷ்ணமாச்சாரி—நாயகி நவின்ற நல்லுரைகள்.
43. எஸ். நடராஜன்—நாதோபாஸனை.
44. என். முத்துக்கிருஷ்ணன் — பக்திப்பாடல்கள்.
45. கே. எஸ். மணவாளன் — வேதாந்ததேசிகர் —மணவாள மாமுனிகள்
46. கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி — உறையூர்
47. பண்ணைக் கோமகன் — குன்றக்குமரன
48. எம். நாராயண வேலுபிள்ளை —
1. மகாபாரதக காட்சிகள்
2. இராமாவதாரம்
49. டி. பால்வணணனா — தெய்வீக உண்மைகள
50. என். சுப்பு ரெட்டியார் — சைவ சமய விளக்கு
51. டி. எம. சௌநதரராஜன் — வாழ்வும வழிபாடும்
52. அமமன் சத்தியநாதன் — பாரதியும் சகதி வழிபாடும
53. நாகர் கோயில் கிருஷ்ணன் — தெய்வீக பண்டிகைகளும தியானங்களும
54. ஏ நடராஜன — உணமையின உயாவு
55 கே. நடராஜதாசன — சித்தி அருளும சகதி வழிபாடு
56. வி. ஆா. ரஙகாச்சாரி — ஸ்ரீமத ரகஸய தரயசாரம்
57. அ. ஸ்ரீநிவாசன் — வைணவ தத்துவ ஞான அடிப்படைகள்
58. டி எஸ். ராஜகோபாலன் — கீத கோவிந்தம
59 பொன் பாஸ்கர மார்த்தாண்டன் — வாழவைக்கும் வைகுணடங்கள்
60. ஏ. சுதாஸனன் — ஸ்ரீசுதர்ஸன வைபவம்

# மதுவைப் பற்றி மஹா பாரதம்

முன்னோர்களும் மூத்தோர்களும் ஆக்கிவைத்த சாஸ்திரங்கள் பல. இவை அனைத்துமே மனிதகுல நலத்தைப் பற்றியே உண்டாக்கப்பட்டதல்லாமல் கெடுதல் உண்டாக்க அல்ல.

மதுவைப் பற்றியும் அதன் தீக்குணங்களைப் பற்றியும் எல்லோருமே அறிவோம். மது எப்படி மக்களை மாக்களாக்கவல்லது என்று அது கெடுத்த குடும்பங்களைப்பார்த்தாலே தெரியும். இநத மதுவையருந்துவதால் மனிதன் அடையக் கூடிய இழிவையும், எதனால் மனிதன் மதுவை விரும்பக் கூடாது என்பதையும் மஹாபாரதக் கதை வாயிலாக நாம் அறியலாம்.

எண்ணிறைந்த அறிவுச் செறிவு மாணிக்கங்களாலான ஒப்பற்ற மாலையே மஹாபாரதம். இதில் வரும் ஒவ்வொரு உபகதையும் ஒரு மாணிக்கம்; அந்த உபகதை கற்பிக்கும் தத்துவம் ஒவ்வொன்றும் விலைமதிப்பேயில்லாத வைடூரியம் எனில் அது மிகையேயில்லை. புராணங்கள் வாயிலாக முனிவர்களும் ஞானிகளும் தங்களுடைய இதயத்தைக் கடைந்தெடுத்து தந்த அமுதத்தை நாடி தெய்வப் பிரசாதமாகிய முனிவர்களின் அறிவும், அருளும் பெறும் முகமாக அவர்களால் உண்டாக்கப்பட்ட ஒப்பற்ற சாஸ்திரங்களைப் படித்து நடைமுறையில் கொண்டு வந்தாலே நாம் உய்யும் பாதையில் அடியெடுத்து வைக்க ஆரம்பித்து விட்டோம் என்று பொருள்.

முன்பொரு சமயம் தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் மூவுலகங்களின் ஆட்சியுரிமை குறித்துக் கடுமையான தேவாசுர யுத்தம் நடந்து வந்தது. தேவகுரு பிரஹஸ்பதி, அசுரகுரு, சுக்ராச்சாரியார் இவர்களின் பக்க பலத்தைக் கொண்டே இந்த யுத்தம் நடந்தது. தேவகுரு பிரஹஸ்பதிக்கு தெரியாத சஞ்சீவினி வித்தை (இறந்தவரை உயிர்ப்பிக்கும் வித்தை) அறிவுக் கடலான சுக்ராச்சாரியாருக்குத் தெரிந்திருந்தது. இந்த சஞ்சீவினி வித்தை மகிமையால் இறந்த அசுரர்கள் மீண்டு வந்து போர் செய்ய, தேவர்கள் பெருங்கலக்கமுற்றார்கள். அந்த வித்தையறிந்தவன் தங்கள் பக்கத்தில் இல்லாதவரை தங்கள் கதி அதோகதி என்று உணர்ந்து பிரகஸ்பதி குமாரன் கசனை சுக்ராச்சாரியாரிடம் சென்று, பூரண பிரம்மச்சரியம் செய்து, அவரின் நன்மதிப்பைச் சம்பாதித்து, சஞ்சீவின் வித்தையைக் கற்று வர அனுப்பினார்கள்.

சுக்ராச்சாரியாரும் தகுந்த சீடன் ஆசார்யனிடம் பிரம்மச்சாரியாக எடுத்துக் கொள்ளக் கேட்டால், அறிவு பெற்ற ஆசாரியன் மறுக்கக் கூடாது என்ற நியதிப்படி, கசனைத் தம் சிஷ்யராக ஏற்றுக் கொண்டார்.

அநேக வருடங்கள் முகம் கோணாமல் எவ்வித குறைவுமின்றி சுக்ராச்சாரியாருக்கும், அவர் பிரிய மகள் தேவயானிக்கும் கசன பணிவிடை

திருமதி. பி. எஸ். கமலா பார்த்தசாரதி,
திருப்பதி.

செய்து அவர்கள் பிரியத்துக்குப் பாத்திரனாகி வந்தான்.

இதற்கிடையில் அசுரர்களுக்குக் கசன் நோக்கம் தெரிந்து மனப் போராட்டம் ஏற்பட்டது. அதன் முடிவில் கசனைக் கொல்லுவித்தலே சஞ்சீவினி வித்தை தேவர்களுக்குப் போகாமலிருக்கும் வழி என்று கசனின் அழிவு குறித்து சிந்தித்து,

---

முதல் முறையில் அவனை வெட்டித் துண்டாக்கி நாய்களுக்கு இரையாக்கினார்கள். தேவயானியின் வேண்டுகோளுக்கிணங்க சுக்ராச்சாரியார் சஞ்சீவினி வித்தையைப் பிரயோகித்துக் கசனை உயிர்ப்பித்தார்.

மற்றொரு சமயம் கசனை வனததில் கொன்று தேகத்தை அரைத்து கடல் நீரில் கரைக்க முன் போலவே சுக்ராசாரியார் கசனை மீட்டார். ஆயினும் அசுரர்கள் மனம் தளர்ந்தபாடில்லை. மூன்றாவது முறையும் கசனைக் கொன்று அவன் உடலை சுட்டுச் சாம்பலாக்கி அநதச் சாம்பலை மது பானத்தில் கலந்து சுக்ராச்சாரியாருக்கே கொடுத்தார்கள். சுகராச்சாரியாரும் அதையறியாமல் குடித்து விட்டார். இருட்டி வெகு நேரமாயும் கசன் வராமை குறித்து தேவயானி கவலை கொணடாள். சுக்ராச்சாரியார் பலவாறு தேற்றியும் சமாதானமாகாமல் உபவாசம் பூண்டாள். மகளை உயிருக்கும் மேலாக நேசித்த சுக்ராச்சாரியார் அசுரர்கள் மீது கோபம் கொண்டு, சஞ்சீவினி மந்திரத்தைச் சொல்லி கசனை அழைக்க அவன் அவர் வயிற்றுக்குள்ளிருந்து பதிலிறுத்தான். சுக்ராச்சாரியார் ஆச்சரியப்பட்டு கசனை ' நீ எவ்வாறு என வயிற்றுக்குள் வர நேர்ந்தது' என வினவ அவன் நடந்த உண்மையைக் கூறினான். மதுபானத்தால் தான் ஏமாற நேர்நததை அறிந்து சினமுற்ற தவப்புதையலான சுக்ராச்சாரியாா கோபத்துடன் பின் கணடவாறு கூறினார்: ''எவன் அறிவினமையால் மதுபானம் செய்கிறானோ அவனைத் தருமம் உடனே விட்டு விலகும்; எல்லோராலும இகழப்படுவான். இது எனனுடைய முடிவு. இதை இன்று முதல் மக்கள சாஸ்திரமாக வைத்து நடகக வேணடும்''.

பின்னால் வயிற்றுக்குள்ளிருந்தே கசன் சஞ்சீவினி வித்தையை உபதேசம் பெற்றதும், பின் அதே வித்தையைச் சொல்லி சுக்ராச்சாரியர் கசனைக் கூப்பிட, அவன் வெளிவந்து அதே வித்தையைப் பிரயோகித்து சுக்ராச்சாரியாருக்கு உயிர் கொடுததும் வேறு கதை.

மதுவானது, ஞானக்கடலும் மகிமையும் ஒருங்கே திரண்டு உருக் கொண்டவரான சுக்ராச்சாரிடமே தன் கைவரிசையைக் காட்டி அவரை அறிவிழக்கச் செய்யவல்லதுதானால சராசரி மனிதன் அந்த மதுபூதத்தின் பிடியில் அகப்பட்டால் எப்படியெல்லாம் மாறுவான், என்னவெல்லாம் செய்வான் என்று சொல்லவும் வேண்டுமோ? மதுவால் கெட்டுக் குட்டிச் சுவரான குடும்பங்கள் எத்தனையோ? அது பறிதத மாங்கல்யங்கள் கணக்கிலடங்கலா. ஆண்டி முதல் அரசன் வரை ஆட்டுவிககும் அசுரனான மது இநநாளில பெண்களையும்விடவில்லை. நாகரீகம் என்ற பெயரில் நங்கையரும் மதுவருந்தி நாசமாகின்றனர்.

மதுஅருந்துபவர்களை அத்தீய பழக்கத்திலிருந்து விடுவிக்க சட்டங்களாலும் முடியாது. சாஸ்திரங்களாலும் முடியாது. எல்லாவற்றிலும் சிறந்ததான மனககட்டுப்பாடே மருநதாகும். அம்மனக்கட்டுப்பாட்டைப் பெற புராணங்களும் இதிகாசங்களும் துணை நிற்கின்றன. இவை கூறும் உரையைக் கேட்டோ, படித்தோ உணர்ந்தவன் தன்னையறியாமல்கூட மதுபானம், சூதாட்டம் போன்ற தீவழி போக மாட்டான் என்பது திண்ணம்,

★

# மாங்கல்யம்

மங்கையர்களின் வாழ்க்கையில் மாங்கல்யம் முக்கிய இடத்தைப்பெற்றது. அவர்கள் பிறந்தது முதல் தாய் தந்தையரால் சீரும் சிறப்புமாக வளர்க்கப்பட்டு, பின் தகுந்த காலம் வரும்போது மாங்கல்ய பாக்கியத்தைப் பெறுகிறார்கள். அத்துடன் சுமங்கலி எனும் பட்டத்தையும் பெற்று அனைத்து விதமான சுபசடங்குகள், யாகங்கள், சுமங்கலி பிரார்த்தனைகள் போன்றவைகளில் முதலிடத்தையும் வகிக்கின்றார்கள்.

ஸ்ரீ ஜாதகத்தில் லக்னத்தின் சுப கிரக சேர்க்கை, குரு சுக்ர பார்வை, சேர்க்கையால் நல்ல தோற்றத்தையும், நான்காமிடத்தைக் கொண்டு பதிவிரதாத் தனமை, ஐந்தாமிடத்தைக் கொண்டு தானாகவே நேசித்துக் கணவனைப் பெறுதல், ஏழாமிடத்தைக் கொண்டு கணவனின் வாழ்க்கையின் உயர்வுதாழ்வுகள், ஒன்பதாமிடத்தைக் கொண்டு தீர்க்க சுமங்கலியும் நிர்ணயிக்கப்படுகின்றன. இந்த இடங்களில் குரு, சுக்ரன், வளர்பிறை சந்திரன்சேர்க்கை நல்லபலன்களையும், புதன் சேர்க்கை, பார்வையால் நேசித்து மணம் புரிவதும் ஏற்படுகின்றன. பாபகிரக சேர்க்கை சூரியன், தேய்பிறை சந்திரன், செவ்வாய், சனி, ராகு, கேதுக்களால் தோஷங்கள் ஏற்பட்டு துயரமான பலன்கள் ஏற்படுகின்றன. சுபகிரக பார்வையால், தெய்வ பூஜையாலும் இத்தோஷங்கள் நீங்கி நன்மை உணடாகும். அவ்வாறு தோஷம் நீக்கப்பட்டு, இன்று மக்களிடையே நன் மதிப்புப் பெற்று, பெண்களின் வாழ்க்கைக்கோர் பாடமாக விளங்குபவர் தான் பதிவிரதா சிரோமணி பட்டம் பெற்ற அசுவபதி மன்னனின் புதல்வியாகிய சாவித்திரி தேவி. இவர் கதை அனைவரும் அறிந்ததாயினும் அவ்வாறு கிரகங்களினால் தோஷமுள்ள பெண்கள் தம் வாழ்க்கை வீணாகுமே என எண்ணி வருந்தாமல் மாறாக பரிகாரங்களினால் நல் வாழ்க்கை பெறலாம் எனும் நம்பிக்கையை பெறச்செய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சாவித்திரி தேவி தன் தாய்தந்தையரால் நன்முறையில் வளர்ககப்பட்டு திருமணப் பருவத்தை அடைந்த காலத்தில் ஒரு நாள் நாரத முனிவர் அரண்மனைக்கு வந்தார். சாவித்திரியின் தாய் தநதையர் பாதபூஜை செய்து வணங்கிய தருணத்தில் அவர்களுக்கு ஆசி கூறி சாவித்திரியை நோக்கி, ''தீர்க சுமங்கலியாகவும் உலகம் போற்றும் பதிவிரதையாகவும் விளங்குவாய்'' என வாழ்த்தினார். அப்போது அவளின் தந்தை சாவித்திரிக்கு தகுந்த மாப்பிள்ளை யார் எனக் கூறி இறுதியாக உன் மனதுக்குகந்தவன் யார் என கேட்டதும தோழி மூலமாக சத்தியவானின் படத்தை எடுத்துக் காட்டுகிறாள்.

**திரு. ஏ. ராகவய்ய ஜோஸ்யர்**
**திருவள்ளூர்.**

இதைக்கண்ட நாரதர் அவன் நாடு நகரத்தையுமிழந்து, மேலுமகுறைந்த ஆயுளையும் பெற்றவன் திருமணமான ஒரு வருடத்திற்குள் அவனுக்கு கண்டமொன்றுண்டு எனக் கூறுகிறார். அதனால் அவளின் பெற்றோர்கள் அவனுககுத் தரமாட்டோம் என கூறினாலும சாவித்திரி பிடிவாதமாக அவரையே மணப்பேன் எனக் கூற நாரதர் மீணடும் தீர்க்கசுமங்கலியாவாய் என வாழ்த்திச் சென்றார். மீண்டும் நாரதரே அத்திருமணததை முடித்து குறுகிய காலத்தில் வரும் ஆபத்தை தவிர்க்க சாவித்திரி கௌரி விரதத்தை செய்து, சுமங்கலிகளின் பிரார்த்தனைகள் செய்து அவர்தம் ஆசியும் பெறுவாயானால் நீ மீண்டும் உனது கணவனின் உயிரைப் பெறலாம் எனக்கூறினார். அவர் தம்வாக்குப்படியே சாவித்திரி செய்தாள். அது சமயம் கிரக கோளாறுகளால் சத்தியவானுக்கு உயிர்பயம் மட்டும் ஏற்பட்டது. இதை அறிந்த சாவித்திரி சத்தியவானுடன் துணையாக இருந்தாள். அவன் செல்லும் இடங்களை அறிந்து அங்குச்செல்லும பொழுதெல்லாம அவனுக்குத் துணையாகவே சென்றாள் தன் கடமை வழுவாத காலதேவன் சத்தியவானின் உயிரைப் பறிக்க வந்த பொழுது அவரை நேரில் கண்ட சாவித்திரி அவருடன் வாதாடினாள். தன் மாமியார், மாமனார் கண பார்வை பெறவேண்டுமென வும் இழந்த ராஜ்யத்தையும், ஐசுவரியத்தையும் பெறும வரத்தையும் தனக்கு சந்தான வரங்கள் பெருகும் வரத்தையும தருமாறு வேண்டினாள். அவ்வாறு ஆகட்டுமெனத் தன்னை மறந்து வரம் தந்த எமதர்மன் பின் தவறை உணர்ந்து சத்தியவானின் உயிரைத் திரும்ப அளித்தான்.

இவ்வாறு சாவித்ரி, கௌரி விரத மகிமையால் காலதேவனை நேரில் தரிசிக்கும் பாக்கியத்தையும், தன் கணவன்உயிரை மீளவும பெறும் வாய்ப்பையும், பதிவிரதை எனும் பெரும் பாக்கியத்தையும் பெற்று பிறந்த வீட்டிற்கும், புகுந்த வீட்டிற்கும் இணையில்லாப் புகழைத் தேடித்தரும ஒரு வாய்ப்பையும் பெற்றாள். ஜோதிடத்தின்படி பார்க்கும் பொழுது தோஷங்களாலும், கிரக நிலைகளாலும இவ்வாறு ஏற்படும் வாய்ப்பை பெற்றுப் பிறகு தக்க பரிகாரங்கள் மூலமாக அத்தோஷங்கள் நீங்கி தீர்க்க சுமங்கலியானாள் எனத் தெரிகிறது.

சில பெண்களுக்குத் தக்கபருவத்தில் திருமணங்கள்நடைபெறாமல்திருமணத் தடைகள் உண்டாவதை நாம் பார்க்கிறோம். அவ்வாறு ஏற்படும் பெணகளுக்கு அதற்குண்டான காரணத்தை எடுத்துக் கூறி அதற்குரிய தக்க பரிகாரங்கள் சில சாந்திகள், கௌரி விரதம், மங்கள கௌரி விரதம், சுமங்கலி பூஜைகள் போன்றவைகள் செய்வதால் அவை நீங்கு

மென எடுத்துக் கூறுதல் பெரியோர்களின் கடமை. இந்த சாவித்திரியால் அனுஷ்டிக்கும்படி செய்யப்பட்ட அக்கௌரி விரதம்தான் காரடையான் நோன்பெனக் கூறுகிறார்கள். எனவே அவ்விரதத்தைநியமனத்துடன் கடைபிடித்து, அதற்குரிய பலனையடைந்து, பெரியோர்கள் ஆசியால் நல்ல வாழ்க்கைப் பெற்று, தம் வாழ்க்கை வீணானதே என வருந்தாமல் வாழ்ந்து பெண்கள் நலமடைவார்களாகுக. ★

---

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

வேண்டுமென்று எண்ணிக் கொண்டே, அங்குப் பெருமாள் பக்கத்திலிருப்பதும் மேலே நாற்புறங்களிலும் பரவி மிகவுயர்ந்து அகன்ற பெரிய பல கிளைகளையுடையதுமான புளியமரம் ஒன்று-தளிர்த்த சில கிளைகளோடும் பூத்த சில கிளைகளோடும் காய்கள் நிரம்பிய சில கிளைகளோடும் பழுத்த பழங்கள் நிறைந்த சில கிளைகளோடும் கூடி, எப்போதும் எக்கிளையிலும் உலகிற்கு உதவும் முயற்சியிலிருந்து ஓய்தலாகிய உறக்கமின்றி, பெரிய குடைபோல் பெருமாளைச் சுற்றிலும் மறைத்துக் கொண்டு நிற்கிறபடியைக் கண்டு மனத்தில் வியப்படைந்து, உறங்காத இப்புளியமரம் நிச்சயமாக உறக்கமற்ற நித்யஸூரிகளில் ஒருவருடைய அம்சமாகவே இருக்கத் தகும். அதிலும் எப்போதும் பரந்துள்ள தன் படத்தொகுதிகளாகிய விசாலமான வெண்குடை கொண்டு பெருமானுக்குப் பனி வெயில் முதலியன படாதபடித் தடுக்குமியல்வினனாய் அப்பெருமானுக்கு அந்தரங்கத் தொண்டனான ஆதிசேஷனாகவே இருக்கத்தகும் இப்புளிய மரமென்று நினைத்து, அதன் பின்பு புளிய மரத்தினருகே தென் மேற்குத் திசையில் அதே லக்ஷணங்களையுடையதோர் செண்பக மரத்தையும் கண்டு அதனையும் ஒரு தேவதையின் அம்சமாகவே நினைத்து, இங்குச் சுற்றுப் புறங்களிலுள்ள மரங்களை வெட்டாமல் எங்ஙனம் கோவிலோ தோட்டமோ உண்டாக்க முடியும்? என்றெண்ணிக் கொண்டேயிருககையில், பகவானால். இப்புளிய மரம் எனது இருப்பிடம், இச்செணபகமரம் திருமகளின் இருப்பிடம் ஆகையால் இவ்விரண்டையும் விட்டு மற்ற மரம் செடி கொடி முதலியவற்றை வெட்டிக் கோவிலும் தோட்டமும் நிருமித்தல் வேண்டுமென்று கட்டளையிடப் பெற்றவனாய் அங்ஙனமே செய்தான். (ரங்கதாஸன்)

வராஹ புராணம் இரண்டாம் பகுதி ஒன்பதாமத்தியாயத்தில் ரங்கதாஸனைப் பற்றிய சந்தர்ப்பத்திலும்-தேவதைகளாலே வணங்கப்பட்டுப் பகவானுடைய ஆஸ்தானமான புளிய மரமும் மகாலக்ஷ்மியின் ஆஸ்தானமாகிய செண்பக மரமும் என்ற இவ்விரண்டினையும் பகவானது உத்தரவின்படி விட்டுவிட்டு ரங்கதாஸன் பெருமாளைச் சுற்றிக் கீழிலிருந்து கற்சுவரெழுப்பினான். அழகிய மரத்துண்டு பலகைகளினால் பெருமாளுக்கு வாஸஸ்தானத்தை (கருவறையை) விரைவில் கட்டுவித்தான். கற்சுவருக்கு வெளியில் சுற்றும் பூந்தோட்டமுண்டாக்கினான் என்று கூறப்பட்டது.

அதிலேயே பத்தாமத்தியாயத்தில் தொண்டைமான் சக்கரவர்த்தியைப் பற்றிய கதைப் பகுதியிலும்-தேவதேவனான பகவான் கூறியபடிப் பால் திருமஞ்சனம் முதலானவற்றைச் செய்து மதிலையெழுப்ப முயன்றான் தொண்டை மன்னவன். அப்போது அவனுக்குப் பகவான் தேவதேவன் புளி செண்பகமென்னும் மிகச் சிறந்த இம்மரங்களிரண்டினையும் காப்பாற்றக்கடவாய். எனது ஆஸ்தானமாகிய புளியமரம் லக்ஷ்மியின் ஆஸ்தானமாகிய செண்பக மரம் ஆகிய இவ்விரண்டும் மன்னர்களாலும் முனிவர் தேவர் மனிதர்களாலும் ஸதா வணங்கத் தக்கவையன்றோ: அரசர் தலைவா, ஆகையால் இவ்விரணடையும் நிறுத்திவிட்டு மற்ற மரங்களை வெட்டக்கடவாய் என்று கட்டளை செய்தான்-என்று சொல்லப்பட்டது.

இங்குத் திருமாலுக்கும் திருமகளுக்கும் முறையே இருப்பிடமான புளிய மரமும் செண்பக மரமும், 'அவ்விரண்டும் தேவர்களால் வணங்கத் தக்கவையன்றோ' என்றும், தேவர் முதலியோரால் வந்தனை செய்யத் தக்கனவாகவும் வெட்டத் தகாதனவாகவும் பகவானாலேயே கூறப்படுவதனாலும், அவ்வப்போது அப்பெருமானுடைய தொண்டிற்குத் தடை நேருங்காலத்தில் பக்தர்களுடைய வேண்டுகோளின்படி ஒதுங்கிக் கொடுக்குமியல்புடையனவாகவும் சூரியனது அசைவை ஒட்டி அசையுந்தன்மையின்றி எப்போதும் ஒருபடிப்பட்ட (அசையாத) தமது நிழலையுடையனவாகவும் உலகில் பிரசித்தி பெற்ற இந்தப் புளி செண்பக மரங்களைத் துவஜ ஸ்தம்பத்திற்குச் சிறிது தூரத்தில் வடக்கிலும் தெற்கிலுமாக முறைப்படிப் பிரதிஷ்டை செய்வித்து, இவற்றிற்குத் தினந்தோறும் அவசியம் பூஜை செய்ய வேண்டுமென்று கட்டளையிட்டுத் திருவாராதனத்தை நிறைவேற்றியருளினர் ஸ்ரீராமானுஜ முனிவர்.

(தொடரும்)

---

ஸப்தகிரியில் வெளியிடப்படும் கதை, கட்டுரைகள், கவிதைகள் ஆகியவற்றில் காணப்படும் கருத்துக்கள் அவ்வவ் எழுத்தாளர் பெருமக்களின் தனிப்பட்ட கருத்துக்களேயாம். அவற்றிற்கு 'ஸப்தகிரி' எவ்வகையிலும் பொறுப்பேற்காது.

— ஆர்.

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன்,
M.Sc., M.Phil.,
ஆசிரியர் ''சமயஜோதி'' மதுரை.

## புருஷோத்தம யோகம்

### அத்தியாயம்—15.

### பகுதி—8.

பரமாத்மனைப் பற்றிய விளக்கம் மேலும் தொடர்கிறது.

யதாதித்யகதம் தேஜோ
ஜகத்பாஸயதே கிலம் |
யச்சந்த்ரமஸி யச்சாக்னௌ
தத்தேஜோ வித்தி மாமகம் ||

(15-12)

'சூரியனிடத்திருந்து வந்து உலகம் முழுவதையும் விளக்குகிற வெளிச்சமும், மற்றும் சந்திரனிடமும் தீயிடமும் உள்ள வெளிச்சமும் என்னிடத்திருந்து வந்த ஒளி என்பதை அறிவாயாக'

முன்பு சூரியன், நட்சத்திரங்கள், சந்திரன் போன்றவை ஆத்மனை ஒளிர்விக்கமாட்டா என்று கூறப்பட்டது. இங்கே உலகுக்கு ஒளி தரும் அவற்றில் உள்ள ஒளி ஆத்மன் அல்லது இறைவனிடமிருந்தே கிடைக்கப் பெறுகிறது என்பது தெளிவாக்கப்படுகிறது.

இந்த இடத்தில் விஞ்ஞானம் கூறும் விளக்கத்துக்கும் இந்தக் கருத்துக்கும் கொஞ்சம் ஆழ்ந்து சிந்தித்தால் உண்மை புலப்படும்.

சூரியன் ஒளிப்பிழம்பு. அங்கே ஒளி எப்படித் தோன்றுகிறது என்பதை நவீன விஞ்ஞானம் அணுசக்தியின் அடிப்படையில் விளக்குகிறது. சூரியனில் ஹைட்ரஜன் வாயு அதிகம் உண்டு. ரசாயன சாஸ்திரத்தில் ஹைட்ரஜன்தான் முதல் மூலகம். அதில் ஒரு புரோட்டானும், ஒரு எலக்ட்ரானும் மட்டுமே உண்டு. நான்கு ஹைட்ரஜன் அணுக்கள் சேர்ந்து ஒரு ஹீலியம் மூலக்கூறாக மாறுகிறது. இதற்கு உட்கருச் சேர்க்கை (nuclear fusion) என்று பெயர். இந்த மாற்றம் நிகழ்கையில் அபரிமிதமான வெளிச்சமும் சக்தியும் உண்டாகிறது.

இதுதான் சூரியனின் வெளிச்சத்திற்குக் காரணம். நட்சத்திரங்களிலும் இதே வகை ரசாயன மாற்றம்தான் நிகழ்கிறது. சந்திரனுக்கு ஒளி சூரியனிடமிருந்து வருகிறது.

இந்த பூமி ஒரு பகுதியாக இருந்தது. அதிலிருந்து தெறித்தது ஆரம்பத்தில் ஒளிப் பிழம்பாக இருந்து காலக்கிரமத்தில் ஒளியிழந்து தற்பொழுதைய நிலையை அடைந்தது என்று விஞ்ஞானிகள் பூமியைப் பற்றிக் கூறுவர்.

அணுக்களின் சேர்க்கையாலோ அல்லது அணுக்களின் பிளப்பாலோ (nuclear fission) ஒளி உண்டாகிறது என்பதை இன்றைய ஹைட்ரஜன் மற்றும் அணு குண்டுகள் நிரூபிக்கின்றன.

அணுவாகட்டும், அண்டமாகட்டும் அனைத்தையும் இயக்கும் சக்தி இறைவனுடையது ஆகும். சூரியன், சந்திரன் மற்றும் நட்சத்திரங்கள் நாமறிந்த ஒளிரும் பொருள்கள் ஆகும். எங்கே ஒளி அல்லது வெளிச்சம் இருக்கிறதோ அங்கே சத்வ குணத்தின் தோற்றம் உண்டு. மாசு அகன்ற கண்ணாடியில் முகம் நன்கு பிரதிபலிப்பது போன்று, சத்வ குணத்திலே ஆத்ம சைதன்யம் நன்கு ஒளிர்கிறது. சத்வ குணமும் பரமாத்மனிடமிருந்து வந்தது. ஜடப் பொருள்களை சூரிய வெளிச்சம் விளக்குவது போல 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வே ஆத்மப் பிரகாசம் ஆகும். ஓர் அறையினுள் சூரிய வெளிச்சம் படிகிறது. அங்கே நிறையப் பொருள்கள் இருக்கின்றன. சூரிய ஒளி பொருள்களை விளக்குகிறது. இருந்தும் அந்த அறையினுள் யாரும் இல்லையென்றால் அவற்றை அறிவது யார்? சூரிய ஒளி இருந்தும் இல்லாததும் ஒன்றுதான். மாறாக அங்கே ஒரு மனிதன் இருந்துவிட்டால் அவன் சூரிய ஒளியையும், அது விளக்கும் பொருள்களையும், அங்கே இருக்கும் தன்னையும் அறிகிறான். அவனுள் இருக்கும் ஈசுவரன் என்னும் ஆத்மப் பிரகாசம் அல்லது ஆத்ம சைதன்யமே அந்த அறிவின் அடிப்படை. அறிபவனுடைய அறிவே அறியப்படுபொருளை விளக்குகிறது. இந்த அறிவு பரமாத்ம சொரூபம். எனவே பரமாத்மனிடமிருந்தே சூரியன், சந்திரன் அக்கினி போன்ற பொருள்கள் ஒளியைப் பெறுகின்றன என்பது நிரூபணமாகிறது.

ஆத்ம சைதன்யத்தின் மற்றொரு வல்லமை அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

காமாவிச்ய ச பூதானி
தாரயாம்யஹ மோஜஸா |
புஷ்ணாமி சௌஷதீ: ஸர்வா:
ஸோமோ பூத்வா ரஸாத்மக: ||

(15-13)

'என் சக்தியால் நான் பூமியினுள் பிரவேசித்து உயிர்களைத் தாங்குகிறேன். இனிமை வடிவாகிய சந்திரனாகவும் ஆகிப் பயிர்களையெல்லாம் போஷிக்கிறேன்.'

சூரியனும் சந்திரனும் நமது இரு கண்கள் போன்றவை. உலகில் உயிர்களுக்கு ஆகாரம் சூரியனே. சக்தியின் நிலைகளனும் அவனே. அதனால் தான் ஆதித்யனை கண்கண்ட கடவுளாக நம் முன்னோர்கள் வழிபட்டனர். சூரிய வழிபாட்டை அடிப்படையாகக் கொண்ட 'சௌரம்'

என்ற ஒரு மதமே உருவாயிற்று. இன்றும் நாம் சூரியனை வழிபடுவதற்கென்றே பொங்கல் பண்டிகை கொண்டாடுகிறோம். சூரியக கதிர்களில் நமது உடலில் உள்ள எலும்புகளின் வளர்ச்சிக்குத் தேவையான 'வைட்டமின' 'டி' உள்ளது தாவரங்களும் சூரிய ஒளியின் துணை கொண்டு நீரும் கரியமிலவாயுவும் சேர்நது ஸ்டார்ச்சையும், கார்போஹைட்ரேட்டுகளையும 'ஒளிச சேர்க்கை' மூலம தயாரிக்கின்றன சூரிய நமஸ்காரம செய்வதானது கணகளின சக்தியை அதிகரிக்கிறது. சூரியனையும சந்திரனையும் நாம் கடவுளர்களாக வணங்குவதானது நமது வாழ்விற்கு அவை இன்றியமையாதவை என்பதையே குறிக்கின்றன.

(12-ம பக்கத் தொடர்ச்சி)

கட்டளைக் கலித்துறை

கோளவா யரவில் நடித்தவன் மேவும் குலமலையில்
வேளவிசெய் வோர்க்கு விளஙகச் சமிதைகள வேழநதரும்
மாளவில் சுனையில் கயலகள் திளைககும் மறநினைவோர்
கோள்குணம விட்டுக் கனிந்து தொழுவர் கும்பிடுமே.

வெண்பா

குமமிருளபோல் மாயை குறைவில் உயிர்களை
தம்மறியா மற்செய்யும் தாழ்வதனை—நமபும்
திருவேங் கடவன் திருமார்பின் மங்கை
உருவின்றிப் போககுமதை ஓர்.

கட்டளைக் கலித்துறை

ஓர்நது மறைகற்றும் ஓவாப்பல் வேள்வி உஞற்றிடினும
தேர்நது திருவேங் கடத்திறை தாளினைத் தூமலரால
நேர்ந்து தொழுது மதுசூத னுமாத வாவென்றனபின
ஆர்நது துதியா ரெனிலெங் ஙனம்வரும் அவ்வுலகே.

வெண்பா

உலகும் உயிர்களும் ஓவா தொழிந்த
அலகில பலபொருளும் ஆன்ற—நலமாரும்
நல்லுடலாய் நாரஙகள் நாடா துறைகின்ற
மலவேங் கடத்தானை வாழ்த்து.

கட்டளைக் கலித்துறை

வாசுதே வாமணி வணஞு அடியவர் வாழநின்ற
மாசு சிறிது மிலாவேங் கடத்துறை மாமணியே
ஆசு கவியினால் ஆழ்வார்கள் போற்றிடும் ஆரமுதே
தேசுநிறை மங்கை கணவா என்குறை தீரத்தருளே.

வெண்பா

தீரத்தமும கோனேரி சேர்தலமும் வேங்கடமே
பார்ததவா கணதவரும் பணபுளள—சீரத்தியொடு
பேர்கில்லா ஆழியும சஙகும பிறஙகுமுகில்
காாவணண மேமேனி காண.

கட்டளைக் கலித்துறை

காண்போா ஒருமுறை கட்புலன் போதா கணிப்பரிய
மாணபார் திருமேனி காணப்பல் காலும் விழையுறுவர்
சேணவளர் தேவரும் மண்ணவ ருந்தொழத் தேசுமிக
வேணடும் வரந்தர வேங்கட நீள்மலை மேவினனே.



கொஞ்சம் கணகளை மூடி இப்பிரபஞ்சத்தில நமது பூமியின் நிலையைப் பற்றிச் சிந்திப்போமேயானால் நாம மிகவும் அதிசயத்திலாழ்ந்து போவோம. எண்ணற்ற விண்மீனகள, கிரகங்கள் விண்வெளியில் மிதநது கொணடிருககின்றன. அத்துடன அவை பயங்கர வேகத்தில் தமககே உரிய அயனப் பாதையில் சுழல்கின்றன அதில் சிறிது தவறு நடந்தாலும அவை ஒன்றோடொன்று மோதி பயங்கர விளைவுகள் ஏற்படும. இத்தனைக் கோடிக்கணககான பிரமாண்டமான விணவெளியில் சுழலும் பொருள்களை அதனதன் கதியில் செலுத்துவது எநத சக்தி? சிநதித்துப் பாருங்கள்.

நமமையெல்லாம் இநதப் பூமி தாஙகிக் கொணடிருககிறது. நமமை மட்டுமா? பெரும் பெரும் மலைகள, காடுகள் அனைததையும தாங்கி நிற்கிறது இப்பூமி! அநதப் பூமியோ அணட வெளியில் ஒரு சிறு பநது போல மிதககிறது. அதைத தாங்குவது எநத சகதி? சிந்திததுப் பாருஙகள.

இது மட்டுமா? இன்னொரு ருசிகரமான விஷயம்! சாதாரணமாக தண்ணீரானது கீழே சிந்திவிடும இல்லையா? ஆனால் இப்பூமியின் மேற்பரப்பில் சுமார் முக்கால் பகுதி நீரால் சூழப்பட்டிருக்கிறது. அந்த நீர் வெளியே சிதறிப் போகாது பூமியுடன் அதை இணைத்துப் பிணைத்திருக்கும் சக்தி எந்த சக்தி? சிந்தித்துப் பாருங்கள்.

அதுதான் இறைச் சக்தி. ஈர்ப்புச் சக்தி என்று விஞ்ஞானம் அதை அழைக்கிறது. சூரியனைச் சுற்றி பூமி சுழல்வதன் காரணமாக பருவ காலங்கள் ஏற்படுகின்றன. பல்வேறு விண் பொருள்களுக்கிடையே உள்ள கவர்ச்சி சக்தி மற்றும் எதிர்ப்புச் சக்திகளை சமனப்படுத்துவதன் மூலம் அவற்றை அதனதன் உரிய பாதையில் செல்ல வைப்பதும் இந்த இறைச் சக்திதான். பூமி, நீர், காற்று, நெருப்பு போன்றவற்றில் நிலவும் உயிர்ச் சக்தியாக இறைவன் இலங்குகிறார்.

பூமி நம்மைத் தாங்குவதுடன் மட்டுமல்லாது, நமது உயிர் வாழ்க்கைக்கு ஆதாரமாகவும் விளங்குகிறது. பயிர்கள் வளருவதற்குத் தேவையான உயிர்ச்சக்தி அதனிடம் உள்ளது. எத்தனை காலமாக நாம் பயிரிட்டுக் கொண்டே இருக்கிறோம். மீண்டும் மீண்டும் புதிது புதிதாகப் பயிர்கள் வளர்ந்து நம்மை வாழ்வித்துக் கொண்டேயிருக்கின்றன. இதைத் தமது 'ஓஜஸ் சக்தி' என்று பகவான் குறிப்பிடுகிறார்.

பூமியினுள் புகுந்து எந்த சக்தி அனைத்தையும் தாங்குகிறதோ, சூரியன் மூலம் எந்த சக்தி அனைத்தையும் ஒளிர்விக்கிறதோ, அதே சக்தி தான் சந்திர ஒளியாக ஒவ்வொரு செடியிலும் புகுந்து செல் திரவமாகி மூலிகைகளை வளரச் செய்கிறது. மரம், செடி கொடிகள் வளர எந்த அளவுக்கு சூரிய ஒளி இன்றியமையாததோ, அதுபோல மூலிகைகளின் வளர்ச்சிக்கு சந்திர ஒளி முக்கியமானது. கிரகணங்களின் போது, குறிப்பாக சந்திர கிரகணத்தின் போது உயிர் வகைகளின் வளர்ச்சியும் வாழ்வும் பாதிக்கப்படுகின்றன என்பதை நவீன விஞ்ஞானம் விளக்குகிறது. பௌர்ணமியன்று நடப்பட்டு, பௌர்ணமியன்று பறிக்கப்படும் தக்காளிப் பழங்களின் எண்ணிக்கை அதிக அளவில் உள்ளது என்பதை நவீன விஞ்ஞான பரிசோதனைகள் நிரூபிக்கின்றன.

விதைக்காக வைக்கப்பட்டிருக்கும் நெல்லை சூரிய ஒளியில் மட்டுமல்லாது, சந்திர ஒளியிலும் உலர்த்த வேண்டும் என்பதை நமது விவசாயப் பெருமக்கள் நன்கு அறிவர். ஆயுர்வேத மற்றும் இயற்கை வைத்தியர்கள் ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு சந்திர ஒளியில் வைக்கப்பட்ட மருந்துகளின் நோய் தீர்க்கும் குணம் அதிகரிக்கின்றன என்று நிரூபித்திருக்கின்றனர். வைட்டமின் சத்துக்களின் ஆதாரமாகவும் சந்திரன் அமைகிறது.

எங்கெல்லாம் 'ரஸம்' இருக்கிறதோ அது சந்திரனின் தன்மை உள்ளது. இதைத்தான் 'ஸோமோ பூத்வா ரஸாத்மக:' என்று பகவான் குறிப்பிடுகிறார். 'ரஸம் பொருந்திய சந்திரனாக ஆகி,' என்பது இதன் பொருள். சந்திர ஒளியின் மூலம் ரஸம் கிடைக்கவில்லையேயானால் செடி, கொடி, மரங்களெல்லாம் வறறி வாடிப் போகும். இது தவிர சந்திரன் மனத்துடன் தொடர்பு உடையது. சூரியன் கண்ணுக்குத் தேவதை போன்று, மனத்தின் அதிதேவதை சந்திரன். நமது வீடுகளில் பெண்பாலர் 'சாந்திராயன விரதத்தை' மேற்கொள்வதன் அடிப்படை நோக்கம் தங்களுடையவும், தங்கள் கணவன்மார்களுடையவும் மனோ நிலை சீராக இருக்க வேண்டும் என்பதற்கவேயாகும். ஆங்கிலத்தில் (Lunar) என்பது சந்திரனைக் குறிக்கிறது. மனம் தடுமாறுகையில் ஒருவன் (lunatic) பைத்தியமாக ஆகிறான்.

முந்திய சுலோகத்தில் கூறப்பட்ட 'யதாதித்ய கதம் தேஜோ' என்பதன் மூலம் ஜாக்கிரதாவஸ்தையில் நமக்குக் கண்ணில் தென்படுவது யாவும் இறை சொரூபமே என்பதை விளக்கினார்.

'யச்சந்திரமஸி' என்பதன் மூலம் ஸ்வப்ன நிலையில் மனத்தில் தென்படுவது யாவும் தாமே என்று குறிப்பிடுகிறார்.

'ஸோம' என்பது ஒரு மருந்துச் செடியாகும். அதை மூலிகைகளின் அரசன் என்பர். அது சந்திர ஒளியை ஆதாரமாகக் கொண்டது. அமாவாசையில் இலை இன்றி இருந்து, பின் வளர்பிறையின் போது ஒவ்வொரு இலையாக உதிர்ந்து விடுமாம். 'சோம ரஸம்', 'சோம பானம்' பற்றி வேதங்களில் குறிப்புகள் காணப்படுகின்றன

(தொடரும்)

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

**தினசரி பூசைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை**

சனி, ஞாயிறு, திங்கள மற்றும் செவவாய்க் கிழமைகளில

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுபரபாதம
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

**3-30 முதல் 3-45 வரை : சுத்தி**

3-45 முதல் 4-30 வரை ; தோமால சேவை
(அமநத்ரணோற்சவ கிருஹஸ்தர்கள மற்றும ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞசாங்க ஸ்ரவணம

4-45 முதல 5-30 வரை : முதல அர்ச்சனை **ஸகஸ்ரநாம அர்ச்சனை.**
(அமநத்ரணோறசவ கிருஹஸதர்கள மறறும் ரூ 100/- டிககெட் வாஙகிய நபாகள மடடுமே அனுமதிககப்படுவா)

5-30 முதல 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை

6-00 முதல மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் : 12-00 முதல 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாநதம) 2வது மணி

1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

**1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன**

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு **கைங்கர்யங்கள், இரவு மணி**

8-00 முதல 10-00 (இரவு) **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபாகள் மட்டுமே அனுமதிககப்படுவா)

புதன் கிழமைகளில (ஸகஸர கலஸாபிஷேகம நடைபெறுவதால்)

காலை : 3-00 முதல 3-30 வரை ; சுப்ரபாதம
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாஙகிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.**

**3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை**
(அமந்தரணோறசவ கிருஹஸதர்கள் மறறும் ரூ. 100/- டிக்கெட் வாஙகிய நபாகள மட்டுமே அனுமதிக்கபபடுவா)

4-30 முதல 4-45 வரை : கொலுவு, பஞசாங்க ஸ்ரவணம

4-45 முதல் 5-30 வரை : முதல அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமநதரணோறசவ கிருஹஸ்தர்கள் மற்றும ரூ 100/- டிககெட் வாங்கிய நபாகள் மட்டுமேஅனுமதிககப்படுவா)

5-30 முதல் 6-00 வரை : முதல மணி, பலி, **சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.**

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது **அர்ச்சனை 2வது மணி:**

**8-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்.**

மதியம் : 1-00 முதல்மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள வாகன சேவைகள, ஊஞசல் சேவைகள் முதலியன.

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்.**

10-00 முதல 10-30 வரை : சுத்தி.ஏகாநதசேவைக் கான ஏற்பாடுகள்.

10-30 இரவ : ஏகாந்தசேவை (ரூ 50/- டிககெட வாங்கிய நபர்கள் மடடுமே அனுமதிககபபடுவா)

வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருபபாவாடை நடைபெறுவதால)

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறபபு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 4-30 வரை : நித்ய கடடளை கைங கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்சசனை முதல்மணி மற்றும் அபிஷேகத்திற்கானஏற்பாடுகள.

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை : மூலவருக்கு சமர்ப்பனை

7-30 முதல் 9-00 வரை : தோமாலா சேவை, அர்ச்சனை 2-வதுமணி, பலி,சாத்துமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள்

இரவு7 -00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு10-00 வரை : **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக கான ஏறபாடுகள

10-30 இரவு : ஏகாநதசேவை (ரூ. 50/- டிககெட வாஙகிய நபர்கள மட்டுமே அனுமதிககப்படுவர்)

வெள்ளிக கிழமைகளில (அபிஷேகம நடைபெறுவதால்)

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிககெட் வாங்கிய நபாகள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

**3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங் கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.**

5-00 முதல 6-30 வரை : அபிஷேகம

6-30 முதல் 8-00 வரை : சமர்ப்பணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு **கைங்கர்யங்கள், மணி, முதலியன:**

8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,

10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம ரூ. 50/- டிககெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிககப்படுவர்.)

# ★ ★ ஸாளக்ராமம் ★ ★

ஸ்ரீ லக்ஷ்மி வராக ஸ்ரீமூர்த்திகளின வகைகள் : (லக்ஷணங்கள்)

ஸ்ரீ லக்ஷ்மி வராஹ மூர்த்தி : நீண்ட துவாரம், பளபளப்பான வடிவம்; துவாரத்தின் நடுவில் இரண்டு சக்கரங்கள். பூச்சாம்பு போன்ற கோடுகள் முதலியவைகளுடன் இருக்கும்.

வராஹ மூர்த்தி :- இந்த்ர நீல வர்ணமாகவும், மூன்று பெரிய ரேகைகளுடனும் இருக்கும். இது கிடைப்பது மிகவும் அரிது.

லக்ஷ்மி வராஹ மூர்த்தி :- (மற்றொன்று) கறுப்பும், மஞ்சளும் கலந்து மெல்லிய ஆக்ருதியுடனும் இரண்டு பக்கங்களில் இரு சக்கரங்களும், துவாரம் சமமாகவும், உள்புறம் வெளிப்புறம் பூசினாற்போன்று இருக்கும்.

வராஹ மூர்த்தி :- நீண்ட முகத்துடனும் பூவளயத்தினால் சூழப்பட்டதாயும், துவாரத்தில் சக்கரத்துடனும் இருக்கும்.

ச்வேத வராஹ மூர்த்தி :- நீண்ட மூக்கு ஒரு தெத்துப்பல், வெளுப்பு நிறம், வனமாலை, அழகு முதலியவைகளுடன் இருக்கும்.

பூவராஹ மூர்த்தி :- அடிப்பக்கத்தில் ஒரு சக்கரம், அதன் சமீபத்தில் ஒரு தெத்துப்பல். உயரமாகவும், அங்குச வடிவத்துடனும் இருக்கும்.

கூர்ம வராஹ மூர்த்தி :- இரண்டு புள்ளிகளுடன் உள்ள சக்ர ரேகை. அல்லது சங்க ரேகை. இதன் சமீபத்தில், சக்கர ரேகை அந்தந்த லக்ஷணங்களுடையதும், பஞ்சாயுதங்கள் சுத்தமாகவும் பிரகாசமாகவும் இருக்கும்.

வராஹ மூர்த்தி :- இந்திர நீலக் கல்லைப் போல் உள்ள நிறம். பெரியதாகவும், மூன்று ரேகைகளுடனும் இருக்கும்.

வராஹ மூர்த்தி :- (மற்றொன்று) பசுமை நிறம், உயர்ந்த முதுகு, பின்பாகத்தில் சுவர்ண பிந்துக்கள், சூக்ஷ்மமான ரேகைகள் இப்படியாக இருக்கும்.

மத்ஸ்ய மூர்த்தி :—

*மத்ஸ்யம் என்பது நீண்ட தாமரைப் பூ போலும், வாயில் கோடுகளுடனும் இருக்கும்.

*மீனின் உருவம் போன்ற சிலையும் உள்ளில் சக்கரரேகையும், ஸ்ரீவத்ஸாகாரம் போன்ற பிந்துவும் மாலையுடனும் இருப்பதாகும்,

*மீனைப்போலுள்ள தோற்றம், வழவழப்பு, மேலே புள்ளிகள், துவார முகத்தில் இரண்டு தெற்றுப் பற்கள். இப்படியாக இருக்கும்.

மீனைப் போலுள்ள தோற்றம், வழவழப்பு, சிறிய வால், வாயின் முகப்பில் இரண்டு துவாரங்களுடனும், சக்கரத்துடனும் இருக்கும்

கூர்ம மூர்த்தி :-

*இந்திர நீலவர்ணமாயும், மூன்று கோடுகள் உள்ளதாகவும் பின்பாகம் சற்று உயர்ந்தும் ஆவர்த்த ரேகைகளுடனும் இருக்கும்.

மஹா கூர்ம மூர்த்தி :- வட்டவடிவமாகவும், வனமாலை, தாமரை மலர் சக்கரம் முதலியவைகளுடன் புரசம் பூவைப்போல் தங்கநிறமான அழகிய புள்ளிகளுடன் இருக்கும்.

*உருவத்தில் பெரியதும், அழுத்தமான ஆக்ருதி பச்சை நிறம் சக்கரமுடையது. கபிலவர்ணம் அல்லது பச்சை நிறத்துடனும் இருக்கும்.

*உடல், முதுகு வெளுத்தும், உயரமுள்ளதாயும், குளம்புகள் சின்னம் இருந்தும, கரும் புள்ளிகளுடனும் ஸ்வச்சவாகவும் இருக்கும.

சுதர்சன மூர்த்தி :

*உருண்டையாகவோ, நீண்ட உருண்டையாகவோ, துவாரத்தினுள் ஒரு சக்கரமும், சில புள்ளிகளும் இருக்கும்.

*ஒரு சக்கரத்துடன் கூடியது.

*உருண்டையாகவும், கபில நீல வர்ணங்கள் கலந்தும், துவாரத்தினுள்ளோ அல்லது மேலேயோ ஒரு சக்ரத்துடனும் இப்படியாக இருப்பது மஹா ஸுதர்ஸன மூர்த்தியாகும்.

ஹயக்ரீவர் :- இந்த ஸ்ரீமூர்த்தியானது நீல வர்ணமாயும், அங்குச ரூபமுள்ளதாயும், புள்ளிகளுடனும் இருக்கும்.

ஜனார்த்தனர் :- ஆறு துவாரங்கள் வழவழப்பு, வனமாலை முதலியவைகளுடன் கூடி இருப்பது.

அச்யுத மூர்த்தி : மூர்த்தியின் மேல் சக்கரம். துவாரத்திற்குள் இரண்டு சக்கரங்கள், சிறியதான துவாரம். குளிர்ந்த ஆக்ருதி இப்படியாக இருக்கும்.

ஸ்ரீ சீதா ராம மூர்த்தி: கோழி முட்டை வடிவமாகவும், கீழ் நோக்கு

கோ. க. வா. கோவிந்தராஜ
பாவனுசார்யா ஸ்வாமி
திருச்சி.

முகமுடையதும், குண்டல ரேகை யுடனும், துவார பிரதேசத்தில் சம மான இரண்டு சக்கர ரேகைகளும், கல்ப விருக்ஷ ரேகையுடனும், இடது பாகத்தில் சிரஸ் பக்கத்தில் சக்கர ரேகையுடனும் இருக்கும்.

லக்ஷ்மீ கோபால மூர்த்தி :- குடை போன்ற வடிவம். அதிக வழவழப்பு துவாரமில்லாமை. புள்ளிகள் உள் ளது. பெரியதாகவும், கனமாகவும் சிறந்ததாகவும், பிரகாசத்துடனும் இருக்கும்.

சந்தான கோபால மூர்த்தி :- கறுத்த வர்ணம். நீண்ட உருவம். அர்த்த சந்திரனைப் போன்ற துவாரம். அழ காகவும், பிரகாசத்துடனுமிருக்கும்.

ஷட் சக்கர ஸ்ரீதாராம் : கோழி முட்டை போன்ற சற்று பெரிய வடி வம். நீல நிறத்துடனும், முன்பகுதி யில் ஒரு துவாரமும, அத்துவாரங் களிலிருந்து முறையே, உள்நோக்கி மூன்று துவாரங்களாகப் பிரியும். மூன்று துவாரங்களும் முறையே, வலது பக்கம், இடது பக்கம், மேல் பாகம் ஆக மூன்று பக்கங்களில் சந் திக்கும். துவாரத்திற்கு முறையே இரண்டு சக்கரங்கள் வீதம் இருக்கும். வனமாலையுடன் கூடியதாக இருக் கும.

துவாத சாத்மா ;- இதில் பன்னி ரெண்டு சக்கரங்கள் இருக்கும். பெரி யதாகவும்,நீலமாகவும்,குளிர்ச்சியாக வும் இருக்கும்.

மாதவர் ;- தேனின் நிறம். நான்கு சக்கரங்கள், பளபளப்பான மேனி. ஸூக்ஷ்ம துவாரம் முதலியவைகளு டன் இருக்கும்.

புருஷோத்தமன் : இதில் எட்டுச் சக்கரங்கள் இருக்கும்.

தாமோதரர் :- பெரும் விருத்தா காரத்தோடு இருக்கும்.

அறிந்த வகையில், கிருஷ்ண ஸாள க்ராமங்களில் 16 வகையும், ந்ருஸிம் ஹனில் 13ம், ஸ்ரீராம, சரபாணி, பலராம, ததிவாமன, ச்யாமள நாரா யண, கோவர்த்தன, கிருஷ்ண, ரண ராம, ஸுதர்சன, நாரஸிம்ம, க்ஷீராப்தி சாயீ, சக்ரபாணி முதலிய அபூர்வ மூர்த்திகளும் உள்ளன. சாஸதிரங்களில் ஸாளக்ராமத்திற் குப் பெயாகள் பூரணமாக அறிவித் திருந்தும், அவைகளின் லக்ஷணங்களை பூரணமாக அறிவிக்கவில்லை. ஸாளக் ராமங்களின் மூர்த்தி லக்ஷணங்களை கருட புராணம், அக்னி புராணம், மத்ஸ்ய புராணம், ஸ்ரீ தத்வ நிதி, ப்ருஹத்ஸ்தோததிர ரத்னகரம், ப்ரஹ்மாண்ட புராணததில் பாதாள காண்டம், கண்டகி நதியின் உற்பத்தி விவரணத்திலும் பரக்கச் சொல்லப் பட்டுள்ளது.

ஸாளக்ராம சிலை என்பது சாதா ரணமான கருங்கல் அல்ல ஆனுல் அது தாது வர்க்கத்தைச் சேர்ந்த புதையுயிர்த்தடம் (*Fossil*) துவா ரம் இல்லாத கருங் கூழாங்கல் போல் உள்ள தோற்றத்தைத் தரும். ஸ்வய மாகவே, அஃதாவது இயற்கை யாகவே, ஸாளக்ராமங்கள், அந்தந்த மூர்த்திகளின் வடிவையே கொண் டிருக்கும். அப்படி உள்ளவைகளில் 'வஜ்ஜிர கீடம்' என்று கூறப்படும் ஜந்துவானது, துவாரம் செய்து உள்ளே புகுந்து, அதிலே வசிக்கும் காலங்களில் சக்கரங்களை உருவாக்கு கின்றன. இந்த ஸ்வயம் வ்யக்த மான ஸாளக்ராமங்களில், ஸ்ரீமன் நாராயணன் லக்ஷ்மீயோடுகூட எப் பொழுதும் வசிக்கின்றார். இப்பேர்ப் பட்ட ஸ்ரீ மூர்த்திகளைத் திருவாரா தனம் செய்தால், தரித்திரம் வில கும். மேலும் சந்தோஷம், சௌக் கியம், பாக்கியம், புத்ரபௌத்ராபி விருத்தி, கல்வி, தான்யம் மிகுந்த லக்ஷ்மீ கடாக்ஷம் இன்னும் சொல்லப் போனால் ஐஹிக ஆமுஷ்மீக பலன் களை எல்லாம கொடுத்தும், விருப் பங்களை நிறைவேற்றியும் மோக்ஷத் தையும் தரும். இந்த சக்தி அந்தக் கல்லுக்கு இயற்கையாகவே அஃதா வது ஸ்வயமாகவே ஏற்பட்டுள்ளது.

வெளி சாதனைகளால் ஏற்பட்டதல்ல. இப்பேர்ப்பட்ட ஸாளக்ராமங்கள் கிருகங்களில் இருந்தாலே போதும் ஸர்வாபீஷ்டங்களும் தானே வந்த டையும். மேலும ஸாளக்ராமத்தினை ஆராய்ச்சி செய்த வெளிநாட்டு விஞ் ஞானி ஒருவர் தமது ஆராய்ச்சியின் முடிவில — "இந்தக்கல் ஆகர்ஷன சக்தி வாய்ந்ததுமல்லாமல், தெய்விக, இயற்கைக்கு மேலான சக்தி இருப்ப தால், இதில் பகவானின் தோற்றம் இருக்கிறது என்பதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை" என்கிறார். மேலும் சில சோதனைகளையும் விவரிக்கும் பொழுது, 'தினமும் திருவாராதனம் செய்து திருமஞ்சனம் செய்து வந்த ஸாளக்ராமத்தினை ஒரு தட்டில் வைத்து, ஊசி ஒன்றை எடுத்து தட் டின் மறுகோடியில், சற்று ஸாளக்ரா மத்தின் அருகே இருக்கும் படியாக வைத்து, ஸாளக்ராமத்தை மெள்ள சுற்றினால், ஒரு குறிப்பிட்ட ஸாளக் ராமத்தின் பகுதிவந்தவுடன் அத்தட் டிலுள்ள ஊசியானது சுற்றும். ஏன் என்றால் முறைப்படி ஆராதித்து, அபிஷேகாதிகள் செய்யப்பட்ட அந்த ஸாளக்ராமத்திற்கு காந்த சக்தி இருக்கிறது. இந்த ஒருவகை காந்த சக்திதான் தெய்விக சக்தி யாகும். இது உறுதி' என்கிறார் ஒரு விஞ்ஞானி.

ஸாளக்ராமங்களில் அனேக வித மான தரங்கள் இருக்கின்றன. அவை கள் முக்கியமாக வர்ணம், சக்கரம், துவாரம், உருவம், ஸ்தூலஸூக்ஷ்மம் சுற்றளவு, ஆஸனம், வரைகள், அவ பாவயங்கள் முதலியவைகளை ஆராய்ந்து தரத்தை நிர்ணயிக்க வேண்டும் என்று ப்ரஹ்மாண்ட புரா ணம் கூறுகிறது. மேலும ஜலஜா என்று ஒரு பிரிவு இருப்பதாகவும் ஜலஜாவகை ஸாளக்ராமம குளிர்ந்த வையாகும் என்றும இது விசேஷ பல னைத் தரும் என்றும் கூறப்பட்டுள் ளது.

ஸாளக்ராமங்களில் சக்கரம் பல விதங்களில் அமைந்திருக்கும். அவை

களுக்குத் தகுந்தபடி ஆராதிப்பவர்களுக்குப் பலன்களையும், அஷ்டைஸ்வர்யங்களையும் கொடுக்கின்றன ஸாளக்ராமங்கள் தட்டையாகவும் நீளமாகவும், சிறுத்தும், முட்டை வடிவமாகவும், உருண்டையாகவும் குடை போன்றும், மிருதுவாகவும், பளபளப்பாகவும் பலவிதங்களாகக் காணப்படுகின்றன இவற்றில் நெல்லிக்காயளவு உள்ளது மிகவும் மதிக்கப்படுகின்றது. மிக்க அபூர்வமானதும், கனிப் பொருளுடன் கூடின கெட்டியானவும லேசானதுமான ஸாளகராமத்தை, "புத்திமானுக இருப்பவன் பாலிலாவது, அரிசிலாவது வைக்க வேண்டும் மறுபடியும் அதை எடுத்துப் பார்த்தால் கனமானது, முன்பு இருந்ததைக் காட்டிலும் அதிகமாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட ஸாளக்ராமத்தை திருவாராதனத்திற்கு கிரஹித்துக் கொளளவேண்டும்". எந்த கிருஹத்தில் 12 அல்லது அதற்கு மேற்பட்ட ஸாளக்ராமங்கள் இருக்கின்றனவோ அந்த கிருஹத்தை திவ்விய தேசமாகக் கருத வேண்டும். அந்தஇடத்திற்கு ஸ்பரிஸ தோஷம் கிடையாது.

ஸாளக்ராமம் ஸ்வயம் வ்யக்தம் ஆகையாலும், ஸாளக்ராமத்தில் நித்திய பகவத் ஸாநித்தியம் இருக்கிறது ஏனவே பகவத் ஆராதனம் நின்று போனுல் கூட, மற்றவிடங்களைப் போலல்லாமலும், ஸம்ப்ரோக்ஷணம் தேவை இல்லை. இதை அப்படியே க்ரஹித்து, உத்ஸாஹத்துடன், பாலினுல திருமஞ்சனம் செய்து நித்ய பகவத் ஆராதனததில் எழுந்தருளச்செய்ய வேணும்.

ஸாளக்ராம சிலையானது உடைந்ததானுலும், அது சக்கர ரேகையுடன் இருந்தால் அது பூஜிக்கத்தக்கதாகும். துண்டிக்கப்பட்டதானுலும், விரிந்ததானுலும் ஸாளகராமமானது சுபகரமேயாகும். துண்டிக்கப் பட்டது, நொறுங்கிப் போனது, தீப்பட்டது முதலியவைகள் ஏற்பட்ட ஸாளக்ராமம், எங்கெங்கே இருக்கிறதோ அவ்விடங்களில் தோஷம் கிடையாது. அதற்கு மந்த்ரம், பூஜை விதிகள், திருமஞ்சனம் முதலியவைகள் தேவை இல்லை. ஸ்துதி முதலிய உபசாரங்களினுல் மாததிரம வழிபட்டு வந்தால போதுமானது. ஸௌமியமான மூர்த்தியை, கிருஹத்தாச்சரமிகள் பூஜிக்க வேண்டும். உபனயனம் (பூணூல்) செய்து கொண்டு, 'பஞ்ச ஸம்ஸ்காரம்' செய்து கொண்டவர்கள்தான் பகவத் திருவாராதனம் செய்ய யோக்கியதையானவர்கள். யாதொருவன் விஷ்ணு ஸந்நிதியில் பகவதாராதனம் செய்து, ஸாளக்ராம தீர்த்தத்தைப் பருகுகினுருே அவன் ஸகலவிதமான பாபங்களும் நீங்கி விஷ்ணு ஸாயுஜ்யத்தை அடைகின்றுன். மேலும் அந்த சுத்தமான பவித்திரமான தீர்த்தமானது, ப்ரம்மஹத்தி, ஸ்திரீ ஹத்தி, சிசு ஹத்தி முதலான பாவங்களையெல்லாம் போக்குகின்றது. ஆயிரம் அக்னி ஹோமத்திற்கும், நூறு வாஜபேயத்திற்கும் சமமான பலன்களையெல்லாம் அளிக்கும். கோடி யக்ஞங்களை செய்த பலன்களையெல்லாம் அந்த பகவான் அளிப்பார் என்பது ஸத்யம் என்று ப்ருஹத் ஸ்தோத்திர ரத்னுகரத்தில் சொல்லப்படுகிறது. எனவே ஸ்ரீவைஷ்ணவர்கள், விசேஷ திருவாராதனத்தை தினமும செய்யாமல் போனுலும், கிருஹத்தில் ஸாளக்ராம மூர்த்தி எழுந்தருளியிருப்பதே சுபகாரமாகும்; விசேஷமாகும் சக்தியும், நேரமும் இல்லாதவர் திருவாராதனம் செய்யாமல் போனுலும் தினந்தோறும் சாதாரணமாக பால் அன்னம் முதலியவைகளை சமர்ப்பிதது, கர்ப்பூர ஹாரத்தி செய்து வந்தால் நன்மை தரும் ஸ்திரீகள் கூட தினந்தோறும் ஸாளக்ராமத்தை தொடாமல் நைவேத்தியம் செய்தாலும் போதுமானது. ஒருவருக்கு சக்ரத்தோடு கூடிய ஸாளக்ராமம் கிடைத்தால் மிகுந்த பாக்கியம்தான். இதில் பெரியோர்களால் ஆராதிக்கப்பட்டு வந்த ஸாளக்ராம மூர்த்திகள் கிடைப்பது என்பது பூர்வ புண்ணியம் இருந்தால்தான் கிடைக்கும் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.

ஸாளக்ராமத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள்தான் உபயோகிக்க வேண்டுமா? மறறவர்களும் உபயோகித்து ஆராதனுதிகள் செய்யலாமாஎன்றுல், யாராயிருந்தாலும், ஸ்ரீவிஷ்ணு பக்திஉள்ள ஆஸ்திகர்கள் ஆராதனுதிகள் செய்து பகவத் கடாக்ஷத்தைப் பெறலாம். ஸாளக்ராமம் இருக்கும் வீட்டில் யமதூதர்களும் பயந்து ஓடி விடுகிருர்கள் என்று சொல்லப்படுவதாலும், இதன் தாத்பர்யம் ஆயுள்விருத்தியும் சுபகரமும் என்பதாகும்.

ஸாளக்ராம ஸ்ரீமூர்த்தியைத்தூஷிப்பவர்களும் அலக்ஷியம் செய்து மூலையில் போடுபவர்களும், தோஷங்களைக் கல்ப்பிக்கின்றவர்களும், விலைக்கு விற்கின்றவர்களும், கொடிய பாவங்களைச் செய்தவர்களாவார்கள். இத்தகைய நபர்களுக்கு நரகம்தான் என்பதில் எள்ளின் மூக்களவு கூட சந்தேகமே இல்லை.

இந்த புனிதமான ஸாளக்ராமத்தை ஜாக்கிரதையாக சுத்தமான வஸ்திரத்தில் சுற்றி, துளசி தளத்துடன் வைக்க வேண்டும். அதை தினமும் 'ஏலா லவங்க கநசார ஸுகந்த' தீர்த்தத்தினுலும் பாலினுலும் மஞ்சனமாட்டி, அந்த தீர்த்தத்தைப் பருக வேண்டும். வீட்டிற்கு யஜமானனுய் இருப்பவன் தன் நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்த பின் ஸாளக்ராமத்தை தினம் துதித்து ஆராதனம் செய்வதுதான் உத்தமமானது, எந்த கிருகத்தில் ஸாளக்ராமம் இல்லையோ அந்த கிருகம் மயானத்திற்கொப்பானது என்கிறது சாஸ்திரம்.

பொதுவாக ஸாளக்ராமத்தை கிரகித்து, ஆராதிக்கும் பொழுது, ஆராதிக்கு முன், அதில் பல லக்ஷணங்களையும் பார்த்துத்தான் வாங்க வேண்டும் என்றும், முக அளவு பலன், துவார அளவு பலன், வண்ணத்தில் வேறுபாடுகள் என்றெல்லாம் பார்த்து பின்னர் தேர்ந்தெடுத்து ஆராதிக்க

வேண்டும் என்றும் கூறுவார்கள். இதில் ஓரளவு உண்மைகள் இருந்தாலும், இயற்கையில் ஸ்வயம் வியக்தமாக உண்டாகும் ஸாளக்ராமங்களை பரிசோதித்து எடைபோட நாம யார்? நமக்கு என்ன வேண்டும என்பது பகவானுக்குத் தெரியாதா என்ன! எனவே ஒவ்வொரு கிருகத்திலும் ஸாளக்ராமங்கள் எழுந்தருளச் செய்திருப்பார்களானால், அந்த கிருகத்தில் ஏதேனும் இன்னல்கள் வருமானுல் அது ஸாள க்ராமத்திஞலோ, இந்த ஸாள க்ராமம் தோஷங்கள் உள்ளது என்பதனுலோ கிடையாது. ஸாளக்ராமத்திஞல் தோஷங்கள் போகுமே தவிர வராது.

ஸ்வயம் வ்யக்தமான ஸாளக்ராமங்களில் சில அபூர்வமான ஸ்ரீ மூர்த்திகளும் உள்ளன. ஸ்ரீரங்கத்தில் அடியேனது திருமாளிகையில் பெரியோர்களால் லபிக்கப்பட்டு பரம்பரையாக நித்திய திருவாராதனத்தில் எழுந்தருளியிருக்கும் ஸாளக்ராமத்திலேயே கிருஷ்ணனது 'ராஸக்ரீடை' அமைந்துள்ளது விசேஷாம்சமாகும். ராஸக்ரீடை ஸாளக்ராமத்தில், இயற்கையாகவே யாரும் செதுக்காமல் அழகாக, ஒரு மரம், மரத்தைச் சுற்றி கீழே கோபஸ்திரீகளும் மொத்தம ஒன்பது பேர்கள. மரத்தின் மேலே ஒளிந்து கொண்டு பார்க்கும் ஸ்ரீகிருஷ்ணனும், ஸேவிகக ஸேவிகக, அத்யாச்சர்யமாக, ரொம்பவும் அபூர்வமாக அமைந்துள்ளது. ஸேவித்தாலும காண கண் கோடி வேண்டும். இந்த மூர்த்தி எங்கேயுமே கிடையாது. கிடைப்பதும் மிகவும் துர்லபம். மேலும் ஸ்ரீரங்கம் ஸ்ரீ உ.வே. வி. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ஸ்வாமியின் கிருகத்தில் (தெற்கு சித்திரை வீதி, ஸ்ரீரங்கம்) நித்திய திருவாராதனத்தில் ஸாளக்ராமத்திலேயே எம்பெருமானின் சங்கு, பாஞ்ச சன்னியம் அமைந்துள்ளது. இந்த ஸ்ரீமூர்த்திக்கு திருமஞ்சனம் செய்த பால் இரண்டு நாட்களுக்குக் கெடுவதில்லை. இதையும் ஸேவிக்க கண்கோடி வேண்டும். மேலும் ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரங்களான, ஸ்ரீமுஷ்ணம், திருமலை திருப்பதியிலும் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள எம்பெருமான்களும் மூலவர் முறையே ஸாளக்ராம ரூபியேதான்.

ஸாள க்ராம சிலா புண்யா பவித்ரா
தர்மகாரிணீ |
யஸ்யா தர்ஸன மாத்ரேணபரஹ்மஹா
ஸுத்யதாநர: ||
தத் க்ருஹம் ஸர்வ தீர்த்தாநாம்
பரவரம ஸ்ருதிநோதிதம் |
யத்ரேயம் ஸர்வதா மூர்த்தி:
ஸாளக்ராம ஸிலா ஸிலா ||

ஸாளக்ராம சிலையானது புண்ணியம், பரிசுத்தம் முதலியவைகளுக்குக் காரணமாக இருககிறது. அதைத் தரிசித்த மாத்திரத்திரத்தில் மனிதன் ப்ரஹ்மஹத்தைக்கும் கண்ட சுத்தத்தை அடைகிறுன். அந்த கிருஹத்திற்கும் ஸர்வ தீர்த்தங்களின் பிரபாவம் உண்டாகிறது. ஸாளக்ராம சிலையில் எப்பொழுதும் பகவானின தர்சனத்தால் சுபத்தை அளிக்கும். ஆகவே இத்தகைய மஹாத்மீயங்களையும், அபூர்வங்களையும் உடைய ஸாள க்ராமத்தினை பொக்கிஷத்தைப் போல் ஒவ்வொருவரும் போற்றிப் பாதுகாக்க வேணும்.

(முற்றும்)



திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயிலின் பிரம்மோற்சவத்தின்போது தேவியருடன் போகமூர்த்தி

# பீஷ்மரின் தனிப்பெருமை

"பீஷ்மரின் ப்ரம்மசர்யம" என் னும் தலைப்புடன் ஒரு கட்டுரை என் னுல் எழுதப்பட்டது. அது நமது "ஸப்தகிரி"யில் 1983 டிஸம்பர் மாத இதழிலும், 1984 ஜனவரிமாத இதழிலும் வெளிவந்துள்ளது. அதன் தொடர்ச்சியாகவே இந்தக் கட்டுரை எழுதப்படுகிறது:

ஜனவரி மாதஇதழில் அக்கட்டுரை முற்றுப் பெற்றதாக வாசகர்கள் எண்ணிவிடக்கூடாது என்பதற்காகவே அதன் முடிவில் சிலகேள்விகளை நானே கேட்டிருந்தேன். அவற்றுக்கு ஸமாதானம் பிறகு சொல்லப்படும் என்றும் பொதுவாகக் குறிப்பிட்டிருக்கிறேன். அதையே இப்போது செய்கிறேன். அந்தக் கேள்விகள் வாசகர்களுக்கு நினைவில் இருக்கக் கூடும் என்பதை உத்தேசித்து அவற்றை மீண்டும் எழுதாமல் பதிலை மட்டும் எழுதுகிறேன்.

பிரம்மாண்டமான மகா பாரதக் கதையில் "பீஷ்மரின் தனிப் பெருமை" பரவலாக பேசப்பட்டுள் ளது. இவ்விஷயம் நாடு நகரம் நன் கறிநததேயாம்

மகாபாரதததை இயற்றிய வேதவ்யாஸர், தனது கதாபாத்திரங்களின் செயல்களையும, மனப்போக்கையும் வாாத்தைகளையும், கோபதாபங்கள் போனற உணர்ச்சிகளையும் உள்ள படியே எழுதி வைத்திருக்கிருர்; மகா தபஸ்வியும் த்ரிகால ஜ்ஞானியு மான அவருக்குத்தான் இநத ஆற்ற லுண்டு. ஐநதாவது வேதமெனப் பெயர் பெற்ற இந்த மகாபாரதத் தில் சிறிதளவு கூடப் பொய் கிடை யாது. முற்றிலும் உண்மையே; இதன் மூலமாகவே நாம் பீஷ்மரின் தனிப் பெருமையை அறிகின்றேம். வேதவ்யாஸர் தனது கதைப்போக் குக்கு ஸம்பந்தப்பட்ட விஷயங் களையே மகாபாரதத்தில தொகுத்தி ருக்கிருர். மற்றும பல வழிகளிலும் பீஷ்மரின் தனிப்பெருமை சுடர்விட் டுப்பிரகாசித்திருக்கும. அதெல்லாம் பிற்காலத்தவர்களுக்கு நன்ருகத் தெரிவதற்கான வாய்ப்பில்லை. ஆனுல் பீஷ்மருடன ஸமகாலத்தில் வாழ்நதவரான வேதவ்யாஸர் ஸர் வஞ்ஞராகையால அவருககு வெகு நன்ருகத் தெரிநதிருக்கும். அதனுல் பீஷமரிடம் அளவு கடந்த மதிப்பு வேதவ்யாஸருககிருந்திருப்பது இயற் கையே.

"महर्षेः कीर्तनात्तस्य भीष्मः प्राञ्जलिरब्रवीत्"

எனகிறபடி பீஷ்மருக்கும அவரிடம் பெருமதிப்புணடு (அநத வேதவ்யாஸ மகரிஷியின் பெயரைச சொனன மாததிரத்தில் பீஷமர் இருகையும் கூப்பி வணங்கிஞர் என்று கருத்து -மகாபாரதச்லோகம்-) இதேவழியில் இவ்விருவருக்கும் வேறுசில ஒற்றுமை யுமுண்டு. "भीष्म इसान्त न वोऽ ब वीत्" எனறு தனது தந்தையின் பெயரால் தனனைக் குறிப்பிடுவதில் பீஷ்மருககு அதிகமான பெருமை. அப்படியே "अन्यत्र भीष्मात् गाङ्गेयात्" எனறு இவ ருடைய தாயான கங்காதேவியின் பெயரால் குறிப்பிடுவதிலும் இவ ருக்குப் பெருமையே. வேதவ்யாஸ ருக்கும் இது ஸமானம். பாரசர மகிரிஷி இவருடைய தந்தை. ஸத்ய வதீ என்பவள தாயார். "सहोवाच व्यासः पाराशर्यः" என்றும, "व्यासः सत्यवतीसुतः" என்றும், அவ்இருவரி பெயராலும் இவர் பெருமையாகப் பேசப்படுவார். இந்த வேதவ்யாஸர் பீஷ்மரைப் பற்றிச் சொல்வதைக் கவனிப்போம்.

"अष्टादशपुराणानां कर्ता सत्यवतीसुतः"

எனபது ஒரு பழமொழி. புராணங் கள் பதினெட்டும வ்யாஸர் பண்ணி யதே. இவற்றைத்தவிர ப்ரம்ஸூத் ரஙகளையும் இந்த வேதவயாஸரே பணணியிருக்கிருர். பழம்காலத்து மேதைகள் பலரும இவற்றில் ஆழிந்து- பீஷ்மரின் தனிப்பெருமையை உள்ள படி அறிவதறகு முயன்றிருக்கின் றனா. அவர்கள் காட்டிய வழியி லேயே நாமும் செல்வோம்.

---

நாவல்பாக்கம ஸ்ரீ தேவநாதாச்சாரியர்,
*திருப்பதி.*

---

முதலில் ப்ரம்ம ஸூத்ரங்களில் இழிவோம். ப்ரம்ம ஸூத்ரம், மூன் ருமததியாயம், நாலாம்பாதம், ஒன் பதாமதிகரணம் "விதுராதிகரணம்" (विधुराधिकरणम्) என்று வழங்கப்படு வது. ஒருவனுடைய மனைவி இறநது போனுல், அவனுக்கு "விதுரன்" (विधुरः) என்று பெயர். அவனுக்கும் அவன போன்ற மற்றும சிலருக்கும் பரமமோபாஸனத்தில் அதிகாரம் உண்டா? இலலையா? என்னும் விஷ யம இவவதிகரணத்தில் விசாரித்து முடிவு செய்யபபடுகிறது.

"அதிகாரமில்லை. அவர்கள் ப்ரம் மோபாஸனம் பண்ணக்கூடாது என் பது பூர்வபக்ஷம்." 'அதிகாரமுண்டு. அவர்களும் மற்றவர்கள போலவே ப்ரம்மோபாஸனம் பணணலாம்' என பது ஸித்தாந்தம்:

अन्तरा चापि तु तद्दृष्टेः
अपि स्मर्यते ।

विशेषानुग्रहश्च
अतस्त्वितरज्ज्यायो लिङ्गाच्च ॥

என்னும் நாலு ஸூத்ரங்கள் இதில் உள்ளவை. சங்கர பகவத் பாதர் பாஷ்யத்தில் “ரைக்வர்”, “வாசக்நவீ”, “ஸம்வர்த்தர்” என்னும் மூன்று பேர்களை உதாரணமாக எடுத்துள்ளார். பகவத் ராமானுஜர் ஸ்ரீபாஷ்யத்தில் பீஷ்மரையும் உதாரணமாகக்காட்டியுள்ளார். அதிலுள்ள வாக்யம்:-

...अन्तरा वर्तमानानां अनाश्रमिणामपि विद्याया मधिकारोऽस्त्येव । कुतः? तद्दृष्टेः । दृश्यते हि रैक्व भीष्म संवर्तादीनां अनाश्रमिणामपि ब्रह्मविद्यानिष्ठत्वम् । ... तथा अनाश्रमित्वेपि विद्यादर्शनात् ...'' । எனபதாகும்

இங்கு பீஷ்மர் “அனாச்ரமீ” என்று கூறப்பட்டுள்ளது. “ஆச்ரமீ” என்பதற்கு எதிர்ச்சொல் “அனாச்ரமீ” என்பது. ஏதாவதொரு ஆச்ரமத்தில் இருப்பவன “ஆச்ரமீ” ஆவார். அப்படி ஒரு ஆச்ரமத்திலும் சேராமல் இருப்பவன் “அனாச்ரயீ” ஆவான். தர்ம சாஸ்திரங்களில் நாலுவிதமான ஆச்ரமங்கள் சொல்லப்பட்டுள்ளன. 1) ப்ரம்மசாரீ (2) க்ருஹஸ்தன் (3) துறவி (4) வானப்ரஸ்தன. ஒவ்வொரு மனிதனும் இந்த ஆச்ரமங்கள் நான்கனுள் ஏதாவதொனறில் இருக்கவேணும். இவை ஒன்றிலும் சேராமல் இருக்கக் கூடாது, அனாச்ரமியாக ஒருநாள்கூட இருக்கக் கூடாதென்கிறது ஒரு தர்ம சாஸ்திர வசனம். अनाश्रमी नतिष्ठेत्तु दिनमेकमपि द्विजः विधुरः என்பதைக் காண்க.

பீஷ்மரை “அனாச்ரமீ” என்று கூறுவது இரண்டு விதமாகப் பொருந்தும். (1) பிரம்மசர்யாச்ரமத்தை முடித்துக்கொண்ட பிறகு, க்ருஹஸ்தாச்ரமத்தில் ப்ரவேசிக்காமல் (திருமணமே செய்து கொள்ளாமல்) ஆயுள் காலம் முழுதும் அவர்இருந்துவிட்டதாகக் கொண்டு, ப்ரம்மசாரியுமில்லாமல்— க்ருஹஸ்தனுமில்லாமல் இரண்டுங்கெட்டானாக அவர் இருந்ததனால் “அனாச்ரமீ” எனலாம். (2) அல்லது திருமணம் செய்து கொண்டு க்ருஹஸ்தாச்ரமத்தில் இழிந்த பிறகு அவருடைய மனைவி இறந்து விட்டதாகவும் அவர் மறுதிருமணம்செய்து கொளளாமலேயே விதுரராக(विधुरः) ஆயுள் முழுதும இருந்ததாகவும் கொண்டு அவரை “அனாச்ரமீ” எனலாம்.

இந்த இருவகையான“அனாச்ரமீ” யாகவும் ஒருவன் இருக்கக் கூடாது என்று திட்டவட்டமாக முன்பு காட்டின சாஸ்திரவசனம் தெளிவுபடுத்தி விடுகிறது.

ஸஹஜமான நிலையில் யாரும்தவறு செய்யமாட்டார்கள். ஆனால் ஆபத் காலத்தில் எவரும் செய்யக் கூடாத கார்யத்தையும் செய்யலாம் என்று சாஸ்திரமே இந்தவிதியைத் தளர்த்துகிறது. “ஆபத் காலத்தில் ஒருவன் அனாச்ரமியாக இருப்பது தோஷமாகாது” என்றபடி ஒருவனை அனாச்ரமியாகவே இருககும்படி செய்யவல்ல ஆபத்து என்னவாக இருக்கும்? ஸ்ரீபாஷ்யகாரர் இதையும் விளக்குகிறார். “निवृत्त ब्रह्मचर्यस्य-मृतभार्यस्यच अवैराग्ये सति दारालाभः आपत् என்கிறார்.

“अतस्त्वितरत् ज्यायो लिङ्गाच्च”
(ப்ரம்மஸூத்ரம் 3-4-39)

என்னும் ஸூதர வ்யாக்யானத்தில் தான இவ்விஷயம பேசப்படுகிறது. ஏதாவதொரு ஆச்ரமததில் இருபபதுதான் சிறந்ததாம என்கிறது இந்த ஸூத்ரம.

1) திருமணம செய்து கொண்டு க்ருஹஸ்தனாக இருக்க விரும்பி ஒருவன் பரம்மசர்யாச்ரமத்தை முடிதது கொண்டு, கல்யாணத்திற்குப் பெண் தேடிக் கொணடு போவதாக வைத்துக்கொள்வோம். இப்போது இவன் ப்ரமமசாரி இல்லை. கல்யாணம் பண்ணிக்கொண்டால், க்ருஹஸ்தனாகலாம். இந்நிலையில் அவனுக்கு யாருமே பெண்ணைக் கொடுக்க முன்வரவில்லையாகில் அவன் என்ன செய்வான்? வேறு வழியின்றி அந்த இரண்டுங் கெட்டானாகிய நிலையிலேயே ஆயுள் காலத்தைக் கழிக்க வேண்டியதுதான். இப்படிப் பட்டவன் “அனாச்ரமீ” தான். ஆனால் குற்றமில்லை.

(2) திருமணம் செய்து கொண்டு க்ருஹஸ்தனாக இருக்கும் ஒருவனுக்கு மனைவி இறந்து விடுவதாக வைத்துக் கொள்வோம். அவன் மறுபடியும் ஒரு பெண்ணை மணந்து கொண்டு க்ருஹஸ்தனாகவே இருக்க முயற்சிக்கிறான். ஆனால்! யாரும் அவனுக்கு பெண் கொடுக்க முன்வரவில்லை. அவன் என்ன செவான்? அவன் “அனாச்ரமீ” தான். ஆனால் தோஷமில்லை.

இந்த இருவகையான ‘அனாச்ரமீ’களில் முந்தியவனுக்கு “ஸ்நாதகன்” (स्नातक) என்றும் பிந்தியவனுக்கு “விதுரன்” என்றும் சாஸ்திரங்களில் பெயர் வழங்குகிறது. இந்த இருவகையான “அனாச்ரமீ”களும் “ஆச்ரமீ”யாக மாறி விடலாம். அதற்கு ஒரே வழிதானிருக்கிறது. இவர்கள் ஸன்யாச்ரமத்தை மேற்கொண்டு விடலாம். ஸமஸார சுக போகங்களை அறவே வெறுத்து காவி வஸ்திர முடுத்துக் கொண்டு கையில் கோலேந்தி பிச்சையெடுத்துணணலாம். ப்ரம்மசாரீ - கருஹஸ்தன் என்னும் முதலிரண்டு ஆச்ரமங்களிலும் இவர்கள் இல்லாமற்போனாலும், மூன்றுவதான ‘ஸந்யாஸாச்ரம’த்தில் இழிநது விட்டதனால் “அனாச்ரமீ” எனறு இவர்களைக் கூறமுடியாது. இதற்கு அதயாவச்யமாகவேணடியது ‘துறவு மனப்பானமை’. அஃதிருநது விட்டால் இப்படிச் செய்துவிடலாம். அதில்லாவிட்டால்? ஸனயாஸியாக முடியாது. “அனாச்ரமீ” யாகவே தான் இருந்துத தொலைய வேண்டும். இப்படிப்பட்டவர்களையேதான் ஸ்ரீபாஷ்யகாரா, “ஆபத்தில் அனாச்ரமீயாக இருப்பது தோஷமில்லை” என்கிறார். ஸூத்ரகாரரான வேதவ்யாஸரும், மேலே காட்டிய ஸூத்ரத்தில் இதே கருத்தை அனுமதிக்கிறார்.

"விதுராதிகரணம் (विदुराधिकरणं) என்று பெயர் பெற்ற இந்த அதிகரணத்தில் பீஷ்மரை எடுத்திருப்பது என்ன காரணத்தினால்? மேலே கூறிய இரண்டு வகையான "அனாச்ரமீ"களுள் பீஷ்மரும் அடங்கியதாகத் தானே ஏற்படுகிறது? இது பொருந்துமா? ப்ரம்மசர்யாச்ரமத்தை முடித்துக் கொண்டு "ஸ்னாதக"ராகிவிட்ட பீஷ்மருக்கு, ஒருவருமே பெண் கொடுக்க முன்வரவில்லை என்பது சரியாகுமா? ஈடு இணையற்ற உத்தம க்ஷத்ரிய வீரன். சக்ரவர்த்திக்குப் பிள்ளையாகப் பிறந்தவன். அளவிட முடியாத செல்வம். எத்தனையோ உத்தம ராஜகன்யைகள் போட்டியிட்டுக் கொண்டு ஓடிவருவார்களே! கூன் - குருடு - மொண்டி - நொண்டி ஏழை - கோழை இப்படியெல்லாம் உள்ளவர்களுக்கே பெண் கிடைத்துக் கல்யாணமாகி விடுகிறதே! பீஷ்மருக்குப் பெண்கிடைக்காத காரணத்தினால் அனாச்ரமீயாக இருக்க வேண்டிய இழிவான நிலை ஏற்படுமா?

அப்படியானால் மேலே கூறிய இரண்டாவது "அனாச்ரமீ"யாக பீஷ்மரைக் கூறலாமே! அதாவது பீஷ்மர் திருமணம் செய்து கொண்டு க்ருஹஸ்தராகவே இருந்தார். அவருடைய மனைவி இறந்து விட்டாள். மீண்டும் வேறொரு பெண்ணை மணந்துகொண்டு க்ருஹஸ்தாச்ரமத்திலேயே தொடர்ந்து இருக்க விரும்பினார் பீஷ்மர். ஆனால்? யாரும் பெண் கொடுக்க முன்வரவில்லை. அதனால் "அனாச்ரமீ"யாகவே இருக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது இதுவும் பொருத்தமற்றதுதான். பீஷ்மருக்குப் பெண் கிடைக்கவில்லை என்பது நகைப்புக்கிடம்.

அப்படியே வைத்துக் கொண்டாலும் அவர் 'அனாச்ரமீ'யாகவே இருந்திருக்க வேண்டியதில்லை. ஸம்ஸார ஸுகபோகங்களை அறவே வெறுத்துத் தள்ளின இவருக்கு ஸன்யாஸாச்ரமத்தை மேற்கொள்வதில் சிரமமொன்றுமில்லையே! இவர் துறவியாகி "அனாச்ரமீ" என்னும் இழிவான நிலையைத் தவிர்த்துக் கொண்டிருக்கலாமே? அப்படிச் செய்ததாக இதிகாஸ புராணங்களில் எங்கும் கூறப்படவில்லையே!

இது ஒரு அவிழ்க்கமுடியாத முடிச்சாகவே - பெரும் புதிராகவே இருக்கிறதல்லவா? இருக்கட்டும். சற்று நேரம் வாசகர்களுடைய சிந்தனைக்கே இதனை விட்டு வைப்போம். இக்கட்டுரையிலேயே எமது தீர்ப்பையும் கூறுவோம்.

பீஷ்மருடைய தனிப் பெருமையை ஸ்ரீபாஷ்யகாரராகிய பகவத்ராமானுஜருக்கும் முற்காலத்தவராகிய மகா மேதை குமாரிலபட்டர் அனுபவித்திருக்கிறார். அதை இனி விளக்குவோம்.

பூர்வமீமாம்ஸா தர்சனம் என்பது பிரசித்தமான சாஸ்திரம். ஜைமினி மகரிஷி இதன் முதல்வர். ஸூத்ரகாரர் சபர ஸ்வாமீ என்பவர் பாஷ்யம் எழுதினார். 'குமாரில பட்டர்' இதற்கு வார்த்திகம்-எனப்படும் விரிவுரை எழுதியிருக்கிறார்.

இந்த குமாரில பட்டர் பெரிய மேதாவிகளுக்கும் ஆசார்யாராக இருந்தவர். ஆதிசங்கரருக்கும் முற்பட்டவர். A.D. 620 to 700. இவருடைய காலமாம். உலகப்ரஸித்தமான இவருடையநூல் தந்த்ரவார்த்திகமெனபது. இதில் பீஷ்மரைப் பற்றிய விசாரம் இடம்பெற்றுள்ளது. மீமாம்ஸா சாஸ்திரத்தின் தன்மைக்கேற்றபடி முதலில் தவறுதலான கொள்கையை (பூர்வபக்ஷத்தை) விரித்துரைத்து முடிவில் சரியான கொள்கையை (ஸித்தாந்தத்தை) ஸ்தாபித்திருக்கிறார்.

(தொடரும்)

# செய்திச் சுருக்கம்

### பொன்விழா நிகழ்ச்சிகள்

இவ்வாண்டு தி. தி. தேவஸ்தானம் தன்னுடைய பொன் விழா கொண்டாடுவதை ஒட்டி, ஆந்திர மாநிலத்தின பல்வேறு மாவட்டங்களிலும், மற்றைய மாநிலங்களிலுள்ள குறிப்பிட்ட நிலையங்களிலும, பல்வேறு பொன் விழா நிகழ்ச்சிகளை நடத்த மேலாண்மை தீர்மானித்துள்ளது. இவ்வகையில் அண்மையில், கிருஷ்ணா மாவட்டம் விஜயவாடாவிலும, மேற்கு கோதாவரி மாவட்டம் கனபவரத்திலும், நெல்லூரிலும் இரண்டு நாட்களுக்கு பல்வேறு சமய கலை நிகழ்ச்சிகள் சிறப்பாக நடைபெற்றன. இதுபோது காலை முதல் இரவு வரை கீதா பாராயணம், சமயச் சொற்பொழிவுகள், அன்னமாச்சார்யா சங்கீர்த்தனைகள், திருமலைக் கோயில் பற்றிய கதாகாலட்சேபங்கள், ஹரிகதைகள் போன்றன நடைபெற்றன. இந்நிகழ்ச்சிகளில் சிந்தலபூடி யோகினி மாதா, கராம்சேடு பிரணவானந்த சுவாமிகள், உதயகிரி ஸ்ரீநாராயணானந்த சுவாமிகள் நிகழ்த்திய சமய நிகழ்ச்சிகள் குறிப்பிடத்தக்கனவாக அமைந்தன. மேலும் தி. தி. தேவஸ்தானம் இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் செயலர் திரு. சமுத்ராலா லக்ஷ்மணய்ய, மற்றும் அறிஞர்களான திரு. மல்லாடி சந்திரசேகர சாஸ்திரி, திரு. எம். கொண்டமாச்சார்யலு போன்றனர் இவ்விழாவில் பங்கேற்றனர்.

இந்நிகழ்ச்சிகள் நடைபெற்ற இடங்களில் அந்தந்த மாவட்ட ஆட்சியாளர்களும, தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் பலரும் பங்கேற்று, நிகழ்ச்சிகளைச் சிறப்பித்தனர். இந்நிகழ்ச்சிகள் சம்பந்தப்பட்ட புகைப்படங்கள் இவ்விதழின் உள் அட்டைப்படங்களில் வெளியிடப்பட்டுள்ளன.

### கோடைச் சமயப்பள்ளி

திருப்பதியில் தி தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேங்கடேஸ்வரா பால மந்திரில் அண்மையில 15 நாட்களுக்கு இந்து சமயக்கோடைப்பள்ளி ஒன்று நடைபெற்றது. இக்கோடைப் பள்ளிக்கென 1800 மாணவர்கள் மனு செய்ய, அவற்றில் 48 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டு, பயிற்சி அளிக்கப்பட்டது. இது போது 35 சமய அறிஞர்களின் சொற்பொழிவுகள் நடைபெற்றன. மேலும் இப் பதினைந்து நாட்களில் காலையிலும மாலையிலும சமய நிகழ்ச்சிகளும். இரவில் திரைப்படக்காட்சிகளும நடைபெற்றன. பயிற்சி மேற்கொண்ட மாணவர்களுக்குத் தேர்வுகள் நடத்தப்பட்டு, தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு தி. தி. தேவஸ்தானம் வெளியிட்ட சமய நூல்கள்பரிசாக அளிக்கப்பட்டன. சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

இக்கோடைப்பள்ளி சம்பந்தப்பட்ட விழாவிற்கு, திருப்பதி கேந்திரிய வித்யாபீடத்தின் முதல்வர் டாக்டர். எம். டி. பாலசுப்ரமண்யம் அவர்கள் தலைமை வகிக்க, இக்கோடைப்பள்ளியினைத் தி. தி. கே. இணை செயலாட்சித்தலைவர் திரு. டி. சுப்பராயலு அவர்கள திறந்து வைத்தார்.

### திருமண மண்டபம்

அண்மையில் திருமலையில் கர்நாடக மாநில அறக்கொடையாளர்களின் திருமண மண்டபம் ஒன்றினை, அம் மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு வி. எல். பாட்டீல் அவர்கள் திறந்து வைத்தார் இது சம்பந்தப்பட்ட விழாவிற்கு அம்மாநில தகவல் ஒலிபரப்பு அமைச்சர் திரு. எம. ரகுபதி அவர்கள் தலைமை வகித்தார். இதுபோது, அத்திருமண மண்டபத்தில் நூலகம ஒன்றினை, கர்நாடக மாநில அரசின் தலைமைச் செயலர் திரு. வெங்கடேஷ் அவாகள் திறந்து வைத்தார். இவ்விழாவின் இறுதியில், தி. தி. தே. தோட்டக் கணகாணிப்பாளர் திரு. தம்மண்ணா அவர்கள அமைச்சரவர்களால சிறப்பிக்கப்பட்டார்.



## பெங்களூரில் தி. தி. தே. தாஸ சாகித்ய துறையினர்



பெங்களூரில், சாம்ராஜ்பேட்டையில் தி. தி. தே. தாஸ சாகித்ய துறையினரின் பொருட்காட்சி ஒன்று திறந்து வைக்கப்பட்டது. இதுபோது, 'கேஸவாதிருபம்' எனும் தி. தி. தேவஸ்தானம் பிரசுரித்த நூல் ஒன்றினை, கர்நாடக மாநில தகவல் ஒலிப்பரப்பு அமைச்சர் அவர்கள் வெளியிட்டார்.



இந்நிகழ்ச்சியின போது, ஆங்கிலம், தெலுங்கு, இந்தி, கன்னடம் ஆகிய மொழிகளில் பிரசுரிக்கப்பட்ட "கர்நாடக ஹரிதாஸலு" எனும் நூலினை திரு. வி. எஸ். ஆசார்யா அவாகள் வெளியிட்டார். மேலும, திருவாளர்கள் திரு. ஜி. வி. ஐயர், திரு. கே. அப்பண்ணாசார்யா, திரு. பி. கோவிந்தாசார்யா முதலியோர் சிறப்புரை ஆற்றினர்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

